ஸ்ரீராமஜெயம்

ஸ்ரீ பாண்டுரங்கன்

# பக்த  சேனை

அல்லது

# நாவிதன் கதை









நிர்மலா

கதை எழுதியவர்

N. M. பக்கிரிசாமி

[விலை அணா 0-12-0

ஸ்ரீராம ஜெயம்

# பக்த சேனு

அல்லது

# நாவிதன் கதை




கதை எழுதியவர் :

N. M. பக்கிரிசாமி

உதவி செய்தவர் :

P. நடேசன்

பிழை திருத்தம் செய்தவர் :

பெ. சு. பால்ராஜம் பிள்ளை M. ஆறுமுகம்

விலாசம் :

N. M. பக்கிரிசாமி

நெ. 8, மேலண்டை மாட வீதி, நுங்கம்பாக்கம்

சென்னை.

விலை அணு 0-12-0

இதனுல் சகல கன தனவான் களுக்கும் தெரிவிக்கும் விண்ணப் பம். இக் கதையை வாசிக்கப் பட்டவர்கள் கவனிக்கவேண்டிய முறை சினிமா நடிகர்கள் அந்தந்த ஆக்டின்படி வசனம் பேசுகின்ருர் களோ அதன்படி கோபக் குரி. சாந்தக் குரி, சரசக் குரி, துக்கக் குரி இதுகளைக் கண்டு வரிசை வாரியாக வாசிக்கவேண்டும்.

## முக்கியமான கவனிப்பு

பக்த சேனு என்கிற கதையை 1948 வருஷம் கவர்மென்டாரால் ரிஜிஸ்தர் செய்யப்பட்டு இருக்கிறது. இக்கதையை என் உத்திரவு இல்லாமல் ஒருவரும் அச்சிடப்படாது. இன்னும் மற்ற நாடகக்காரர்களும், ஸ்டுடியோக்காரர்களும் இக்கதையை உபயோகப்படுத்தக் கூடாது. அப்படி மீறி உபயோகப்படுத்தினுல் அதற்குண்டான நஷ்டத்திற்கு ஆளாகுவார்கள். கதை வேண்டுமானுல் என் விலாசத்திற்கு வரவும்.

# பக்த சேனு.

---

1\. சேனு நாவிதன் பாண்டுரங்கனை துதி செய்கிறான். அவன் மனைவி தேவி என்பவள் வந்து பார்த்துவிட்டு, தூஷித்து அடப்பத்தை எடுத்து கொடுத்து வேலைக்கு அனுப்புகிறாள்.

சேனு :- ஓ! பாண்டுரங்கா! பரமானந்தா! பக்தவத்ஸலா! அடியேனை காத்து ரக்ஷிப்பது உன் கடமை பாண்டுரங்கா!!

தேவி :-என்னுங்க, ராத்திரியும் பகலுமாக சொல்லிவச்சியும் கேழ்க்காம, பாண்டுரங்கனை நினைச்சிகிட்டு குந்திக்கிட்டுங்களா?

சேனு :-தேவி, என்ன சொன்னாலும் அந்த ஸ்ரீ பாண்டுரங்கனை மறக்கமுடியுமா; எப்படி மறக்க முடியும். ஒருபோதும் முடியாது தேவி!

தேவி :-என்னுங்க, அப்படியா சங்கதி, இன்னிக்கி மரியாதை கெட்டுப்போகாமே, அடப்பத்தை எடுத்திக்கிட்டுபோய் ஊர் குடிகளுக்கு வேலையை செய்து சம்பாதனையை கொண்டுகிட்டு வாங்க,

சேனு :-தேவி! கோபிக்காதே இதோ போகின்றேன். குழந்தை நிர்மலா! நான் ஊர் குடிகளுக்கு வேலையை செய்து வர்றமட்டும் இந்த பாண்டுரங்கனிடத்தில் குந்தி பூஜித்துக்கொண்டு இரம்மா.

நிர்மலா :-அப்பா! அப்படியே பாண்டுரங்கனை பூஜித்துகிட்டு இருக்கேன் சீக்கிரமாக போய் வாங்கப்பா!

சேனு :-நிர்மலா! இதோ போகிறேன். தேவி! குழந்தையை பயமுறுத்தாமல் பார்த்துக்கொள் தேவி. (பாண்டுரங்கா! பாண்டுரங்கா! என்று சொல்லிக்

கொண்டு சேனு அடப்பத்தை எடுத்துக்கொண்டு ஊருக்குள் வருகிருன்.)

2. *சேனு அடப்பத்தை எடுத்து மனேவியிடம் சொல்லி, வீட்டைவிட்டு தெருவில் வருகிருன். அங்கே பாண்டு ரங்கன் பிச்சைக்காரனுக வந்து பசியில் பரதவிக்கிருர்.*

சுவாமி :-அம்மாமார்களே! அப்பாமார்களே!! எந்த புண்ணியவதிகளாவது எந்த புண்ணியவான்க ளாவது, இந்த பரதேசியின் ஆத்மாவை திருப்திகரம் செய்தால், அந்த ஸ்ரீ பாண்டுரங்கன் நல்ல பதவிக்கு ஆளாக்குவார். கொஞ்சம் அன்னமிடுங்களம்மா.

சேனு :-சுவாமி, என் வீட்டிற்கு வாருங்கள், இந்த அடியேனிடம் அன்னம் புசித்து ஆனந்த மடைந்து போவீர்கள்.

சுவாமி :-அப்பா! அந்த பாண்டுரங்கன் உன்னே நல்ல பதவிக்கு ஆளாக்குவார், அன்னம் கொண்டு வாப்பா.

சேனு :-சுவாமி, இதோ சாதம் தயாராகத்தான் இருக்கிறது. தற்சமயம் இலே இல்லே. கையை பிடி யுங்கள் சுவாமி.

3. *சேனு நாவிதன் பாண்டுரெங்கனுக்கு அன்னமிடுகிருன். அவன் மனேவி பார்த்துவிட்டு பாண்டுரெங்கனே அடித்து புருஷனே திட்டுகிருள்.*

தேவி :-என்னுங்க! உனக்கு அறிவு இருக்கிறதா இல்லேயா! நாலு பறுக்கையை, மீற்று தண்ணியை ஊற்றி வச்சிருந்தா, அதை இந்த கம்மினுட்டிக்கு போட்டு விட்டையே, இப்பொ நான் என்னத்தெ செய்யறது.

சேனு :-தேவி! கவலேப்படாதே ஸ்ரீ பாண்டுரங் கன் உன் ஆத்மாவை திருப்திகரம் செய்வார்.

தேவி :-அவரும் செய்துகிட்டுதான் வர்ருரு, இத் தனே காலமும் நானும் பார்த்துகிட்டுதான் வர்றேன் பேசாமே வாயை மூடுங்க. ஏண்டா பரதேசி பயலே!

எதுக்காக இங்கு வந்தே உன்னை உதச்சாதான், நாளைக்கு இங்கே வரமாட்டே.

சேனு :-தேவி! உன் காலில் விழுகிறேன். பரதேசியை அடிக்காமல் என்னை அடியும் தேவி.

தேவி :-ஏண்டா பரதேசி பயலே, முறைச்சிட்டு பாக்கறே போறையா இல்லையா!

சுவாமி :-அம்மா! என்மேலே ஒன்றும் தப்பில்லிங்கம்மா! நான் சும்மா போகிற மனுஷனை, இவர் தாம்மா கூப்பிட்டு சாப்பாடு போட்டார்.

தேவி :-சிச்சி ; அறிவுகெட்டவனே! வீட்டை விட்டு வெளியே போடான்னு!

சுவாமி :-அம்மா! நான் போறம்மா. என்னை அடிச்சமட்டும்போதும்மா. ஐயா! புண்ணியவானே, நீ சரியான ஆம்பிலேய்யா! காண்பித்து கொடுத்து விட்டு கண்டுக்காமே இருக்கைய்யே. இது தர்மமா! உனக்கு ஒரு கும்பிடு. இந்த மகராஜிக்கு ஒரு கும்பிடு. நான் போய்ட்டு வர்றங்க.

தேவி :- சனியன் ஒழிந்தான். என்னுங்க! உனக்கு வேறே சொல்லவேண்டுமா ஊருக்குள் வேலைக்கு போய் தொலையுங்களே! போறையா இல்லையா.

சேனு :-தேவி! இதோ போகின்றேன், கோபிக்காதே. பாண்டுரங்கா! நீயே துணை.

தேவி :-அடி நிர்மலா! நிர்மலா!.! சக்காளத்தி மகள்கூப்பிட்டகுரலை காதில் வாங்காமல் என்ன மம்மதையாக இருக்கிருள் பார்த்தனையா! அவள் மம்மதையை பரக்சடிப்பதே சரி. எங்கே இருக்கிருள் போய் பார்க்கலாம்.

நிர்மலா :- ஓ! பாண்டுரங்கா! பரமானந்தா! பண்டரிநாதா! பக்தவத்ஸலா!

தேவி :-ஏண்டி! எங்கடி இருக்கான் பாண்டுரங்கன். உன்னையும் அந்த பாண்டுரங்கனையும்,

பாடையிலே வைக்க. கூப்பிட்டதை காதில் கேக்காமே குந்திகிட்டு இருக்கைய்யே. பட்ட உதை போறுமா, இன்னும் வேணுமா.

நிர்மலா :-சித்தியம்மா ! என்னை அடிச்சமட்டும் போதும்மா. நீங்கள் சொன்ன வேலையை, தட்டாமல் செய்கிறேன் சித்தியம்மா. என்னை மன்னித்து விடம்மா.

தேவி :-ஏண்டி ! உதைப்பட்டபிறகு புத்தி வந்ததா ! நான் படுத்துக்கொள்ளுகிறேன், என் கை கால்களை நோய்தீர பிடிக்கவேண்டும். தெரியுமா !

நிர்மலா :-தெரியும் சித்தியம்மா, படுத்துக்கொள்ளுங்கள் நோய்தீர பிடித்துவருகிறேன்.

4. ஊர் குடிகள் க்ஷவரம் செய்துகொள்ள ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு நாவிதன் சேனுவை எதிர்பார்க்கிறார்கள். சேனு அவ்விடம் வருகிறான்.

ராமன் :- ஏண்டா பொன்னு ! என்னத்தடா எட்டி எட்டிப் பாக்கறே.

பொன்னன் :-ராமா! ஒன்னுமில்லே, நம்ப சேனு நாவிதனிடம் க்ஷவரத்தை பண்ணி தொலைக்கலாம்னு பாக்கிறேண்டா. சேனுவை காணலியே.

ராமன் :- நானும் அவனைத்தான் எதிர்பாக்கறேன். அவன்தாண்டா க்ஷவரம் பண்ணரதிலே மகா கெட்டிக்காரன். அவனைவிட யாரும் இல்லே.

பொன்னன் :-அது சரி. நான் தெரியாம ஒருநாள் குளத்தங்கரையண்டை போய் ஒரு அம்பட்டன்கிட்ட க்ஷவரத்தை செய்யச்சொல்லி தலையை கொடுத்துவிட்டேன், அவன் என் குடிமையை பிடிச்சுகிட்டு பண்ணும் பாரு ஒரு கோலம். அது பரமசிவனுக்குத்தான் தெரியும். அன்னியிலேயிருந்து இன்னியவரைக்கும் சேனு நாவிதன் கிட்டயே பழக்கமா க்ஷவரத்தை செய்திக்கிட்டு வர்றேண்டா.

ராமன் :-இப்படி திரும்பிபார்ரு நம்ப சேனு நாவிதனுக்கு சாவு ரொம்ப தூரம்டா. இதோ வந்துட்

டான் இரு கேக்கறேன். ஏண்டாப்பா சேனு! இந் நேரமட்டும் என்னடா செய்திகிட்டு இருந்தே! சொல்லிகிட்டு வாடா.

சேனு :-சுவாமி, கொஞ்சம் நாழியாகிவிட்டது, என்னை மன்னிக்கவேண்டும்.

ராமன் :- சேனு! உன் விஷயத்திலே ஒன்னும் குறைவு நினைக்கமாட்டோம், குந்தி க்ஷவரத்தை பண்ணிவிட்டு போடாப்பா. பொன்னு பக்கத்திலே உட்காரும்.

சேனு :-சுவாமி! கொஞ்சம் இருங்கள் கத்தியை சுத்தமாக தீட்டிக்கொள்ளுகிறேன்.

5. குளக்கரையில் சேனு நாவிதன் பங்காளிகள் ஊருக்குள் பிழைப்பு அகப்படாமல் கஷ்டப்பட்டு சேனுவை கொன்றுவிட ஒருவருக்கொருவர் யோசிக்கிறார்கள்.

தாண்டவராயன் :-என்னடா கந்தா! குளத்துங் கரை மேலே குந்திகிட்டு முக்காடு போட்டுக்கிட்டு இருக்கே.

கந்தன் :-அதை ஏண்டா கேக்கறே, காலையிலிருந்து தெருத்தெருவாய் சுத்தியும், ஊருக்குள் இருக்கும் ஒரு பாவியும் வேலையைச் செய்யடான்னு சொல்லவில்லை, என்னத்தடா பண்ணி தொலைக்கிறது.

தா. ராயன் :- அட பாவிமகனே! இந்த வார்த்தையை ஊர் குடிகள் கேட்டா, ராவிக்கு போடர சோத்தை நிறுத்தி மண்ணை வாரி போடுவாங்க தெரியுமா. வாயை மூடிகிட்டு பேசாம இரு, மிஞ்சி பேச வேண்டாம்.

கந்தன் :- ஏண்டா! நானும் எத்தனை நாளுக்குத் தான் அஞ்சி அஞ்சிக்கிட்டு மிஞ்சி பேசாம வந்தேன், இன்னியிலேயிருந்து ஊர் குடிகளை ஒரு கை பார்த்து விடரண்டா.

தா. ராயன் :-உனக்கு பயித்தியமா பிடிச்சிகிச்சி, ஊர் குடிகள் நம்மை என்னடா செய்தாங்க, அவங்க மேலே சொன்னம்ன்னு கண் அவிஞ்சிவிடும். நம்ப

அண்ணன் மகன் சேனு இருக்கானே, எல்லாம் அவனு லேதான் இருக்குது, அவன் மாண்டுவிட்டான்னு நம்ப எல்லோரும் சுகப்படுவோம்.

கந்தன் :- ஏண்டா, அவன் எப்போ மாண்டு போறது. நம்ப எப்பொ சுகப்படறது. அதெல்லாம் முடியாத காரியம்ண்டா. அவன் இன்னிக்கு ஊருக் குள்ளே வேலையை செய்துவிட்டு, நம்ப தாங்கல் ஓடைக்கா போவான்; நம்ப எல்லாருமா இப்பவே போய், ஓடையில் ஒளிஞ்சிகிட்டு இருந்து அவனே சாகடிக்கனும். நீங்க எல்லாருமா என்னடா சொல் றீங்க.

தா. ராயன் :-கந்தா! நீ செய்த யோஜனை நல்ல யோஜனை. எல்லாரும் வாங்க ஓடைக்கு போகலாம்.

6. நிர்மலா சிறிய தாயாருக்கு கை கால்களை பிடித்து தூங்கவைத்துவிட்டு பூஜை அறைக்கு வந்து பாண்டு ரங்கனை வேண்டி, தன் தகப்பனைப் போய் அழைத் துக்கொண்டு வர வேண்டிக்கொள்ளுகிறது.

நிர்மலா :-ஓ! பாண்டுரங்கா! எனக்கு பசி ஒன் றும் தாள முடியவில்லை. சீக்கிரம் ஊருக்குள்ளே போய் என் தகப்பனை அழைத்துக்கொண்டு வா பாண்டுரங்கா!

தேவி :-இது என்ன! நிர்மலாவை காணவில் லையே! அடி நிர்மலா! எங்கடி போய் தொலைஞ்சே, சீக்கிரமாய் வாடி.

நிர்மலா :-சித்தியம்மா, நீங்க தூங்கிவிட்டிங் கன்னு, பாண்டுரங்கனிடத்தில் போய், எங்கப்பாவை இட்டுகிட்டு வரச் சொன்னேன் சித்தியம்மா.

தேவி :-அடி பயித்தியம் பிடித்தவளே! அங்கே பொம்மைதானே இருக்குது, அந்த பொம்மை போய், உங்கப்பாவை எப்படி இட்டுகிட்டு வரும்.

நிர்மலா :-சித்தியம்மா! அவர் பொம்மையல்ல. அவர்தான் ஸ்ரீ பாண்டுரங்கன்.

தேவி :-அடி கசமாலமே! வாயை மூடிக்கிட்டு, கை கால்களை பிடித்துக்கொண்டு வா!

நிர்மலா :-சித்தியம்மா! படுங்க சித்தியம்மா கை கால்களை பிடிக்கிறேன்.

7. சேனு ஊர்குடிகளுக்கு வேலையை செய்து கட்டளை கேழ்க்கிருன். பாண்டரெங்கன் நிர்மலா சொல்படி சேவகன் உருமாறி சேனுவை வீட்டிற்கு அழைத்துக் கொண்டு வருகிருர்.

ராமன் :-அடே அப்பா சேனு! இந்தா. இந்த நெல்லை எடுத்துக்கொண்டு போய் குத்தி சமைத்து சாப்பிடு போடா. இன்னும் என்ன தேவை சேனு.

சேனு :-சுவாமி ஒன்றும் வேண்டாம். நான் போய்வாரேன் நமஸ்காரம். ஏ பாண்டுரங்கா! ஊர் குடிகள் கொடுத்த தானியத்தை என் மனைவிடம் கொண்டுபோய் கொடுத்தால் என்ன கோபிப்பாளோ ஒன்றும் தெரியவில்லை.

சேவகன் :-அடே சேனு! உன்னைத் தேடித்தேடி கண்கள் எல்லாம் பூர்த்துப்போய்விட்டதே. எனக்கு எப்படா வேலையை செய்து தொலைக்கிறது.

சேனு :-சுவாமி! என்னை கொஞ்சம் மன்னிக்க ணும்! வேலையை இப்பொழுதே செய்துகொள்ளுங்க சுவாமி.

சேவகன் :-சேனு! இன்றைக்கு எனக்கு வேலை செய்யவேண்டாம். நாளைக்கு வந்தால் போதும். ஒரு விஷயம் சேனு, உன் வீட்டிற்குள் உன் மனைவி, குழந் தையை பிடித்து, கை கால்களை பிடிக்கச் சொல்லி வதை செய்கிருள். அவளைக் கொஞ்சம் பயமுறுத்தக் கூடாதா சேனு!

சேனு :-சுவாமி! அவளைத் தாலிக்கட்டிய நாள் முதல் என்னை ஆட்டி படைக்கிருள். ஸ்ரீ பாண்டு ரங்கன்தான் அவளை பயமுறுத்தவேண்டும் சுவாமி.

சேவகன் :-அப்படியா சங்கதி, அப்படின்னு வாடா வீட்டிற்கு போகலாம்.

சேனு :-சுவாமி! நான் போகிறேன் நீங்கள் மகா ராஜா வீட்டிற்கு போங்கள்.

சேவகன் :-எனக்கு போகத் தெரியும், உன்னை அதோ தெரிகிறதே ஓடை, அதை தாண்டி விட்டு விட்டு நான் மகாராஜா வீட்டிற்கு போகிறேன் வாடா.

கந்தன் :-தாண்டவராயா! எல்லாருமாய் இப்படி எட்டி பாருங்கடா. நம்ப சேனு எவனே துணையாக இட்டுகிட்டு வர்ருன்டா நம்ப என்னடா செய்யரது.

தா. ராயன் :- ஆமாண்டா, ஆமாம். ஒன்னும் செய்யமுடியாது நம்ப மகாராஜா வீட்டு சேவகன் தான் இட்டுகிட்டு போராரு சங்கதி என்னமோ தெரியலே. வாங்கடா இந்த குறுக்கு வழியா பூந்து மகாராஜாவிடம் போய் சேனுவின்பேரில் அபாண்டத்தை சொல்லி அடிபட்டு வைக்கலாம். ஓடிவாங்கடா போகலாம் என்று ஓடிவருகிருர்கள்.

8. பாண்டுரங்கன் சேனுவை வீட்டின் அருகில் கொண்டு வந்து விட்டுவிட்டு மறைகிருர். நிர்மலா மனைவிக்கு கை கால்களை பிடிப்பதைப் பார்த்து தன் மனைவியை கேழ்க்கிருர்.

சேவகன் :-அடேயப்பா! சேனு! நீ வீட்டிற்கு போய் நாளைக்கு வேலையை செய்ய கவனமாய் வாடா. நான் வீட்டிற்கு போகட்டுமா சேனு.

சேனு :-சுவாமி! அப்படியே போய்வாருங்கள். நாளை கட்டாயம் வருகிறேன். நம்முடன் வந்த சேவகரும் போய்விட்டார். வீட்டிற்குள் போய் மனைவி, மகளைப் பார்க்கலாம். ஆஹா, இது என்ன நம்முடன் வந்த சேவகர் சொன்னது சரியாகத்தான் இருக்கிறது. தேவி! குழந்தைக்கு ரொம்ப கஷ்டத்தை கொடுத்து விட்டாயே.

தேவி :-அட நாராயணு! நானு கஷ்டத்தை கொடுத்தேன். நான் அப்பவே வேண்டாமடி என்று சொன்னேன், உன் மகள் என்னை பழிக்கி ஆளாக்கி வைத்தாள். சரி அது கிடக்கு, சம்பாதனையை கொண்டாங்க.

சேனு :-தேவி! இந்தா, தானியத்தை பிடித்துக் கொள்.

தேவி:-சரியாப்போச்சு, இந்த சனியனே கொண்டு வந்து கொடுத்தால் யார் குத்தி தொலேக்கிறது. இந்தா இதை எடுத்திகிட்டு போங்க.

சேனு :- அம்மா நிர்மலா! அவள் கொட்டின தானியத்தை எல்லாம் ஒன்றுசேர்த்து கொடம்மா நானே குத்தி தருகிறேன். தேவி! கவலேப்படாமல் இரும்.

நிர்மலா :-அப்பா! சித்தியம்மாவுக்கு கஷ்டத்தை கொடுக்காதீங்கப்பா. இந்தா, இதை எடுத்துக் கொண்டு போய் குத்தி எடுத்துக்கிட்டு வாங்கப்பா.

சேனு :-நிர்மலா! நீயும் கூட வாம்மா. குத்தி எடுத்துக்கொண்டு வந்துவிடலாம்.

9. செல்வ மகாராஜனும் அவர் தகப்பனுர் கனக மகாராஜனும் தர்பார் வருகிறுர். சேனேகள் கூடி ஜே! போடுகிறுர்கள்.

சேனேகள் :-கனக மகாராஜனுக்கு ஜே! செல்வ மகாராஜனுக்கு ஜே! ஜே!! ஜே!!!

கனக மகா :-செல்வா! பாண்டுரங்கன் அருளால் சீரும் சிறப்பும் செங்கோலும் குறைவுபடாமல் இருந்துவருகிறது. என்ன இருந்தும் என்ன பிரயோஜனம் என் தீராப் பிணி நீங்கவில்லேயே செல்வா! என்ன செய்வது.

செல்வன் :-பிதா! உன் பிணி தீரும்படி பாண்டுரங்கனே பூஜித்து வருகிறேன். சிம்மாசனத்தில் வீற்றிருப்பீர் பிதா.

கனக :-செல்வா! ஸ்ரீ பாண்டுரங்கனே ஆனந்தமாக பூஜித்து வருவாயப்பா.

செல்வன் :-ஓ பத்தவதாரம் பூண்ட பரமானந்தா! ஸ்ரீ பாண்டுரங்கா! பக்தவத்ஸலா! என் பிதாவின் பிணியை நீக்கி அவர் சுயரூபம் வரும்படி உன் கடைக் கண்ணுல் பார்க்கவேண்டும் பாண்டுரங்கா.

கந்தன் :-தாண்டவராயா ! நம்ப மகாராஜா சுவாமியைப் பார்த்து விளுந்து விஞந்து கும்பிர்ருரு எல்லாரும் பேசாமலிருங்கடா !

மந்திரி :-ஏ! ஏழைமக்களே ! நீங்கள் யார்? ஏன் இவ்விடம் வந்தீர்கள் !

கந்தன் :-சுவாமி! எங்கள் மகாராஜாவைக்கண்டு எங்கள் பங்காளியின் மகன், சேனு செய்யக்கூடிய துரோகங்களை சொல்லிவிட்டு போகலாம் என்று வந்தோம். நாங்கள் இந்த ஊரில் இருக்கக்கூடிய நாவித மக்கள். எங்கள் குறையை தீர்க்கவேண்டும் சுவாமி !

கனக :-மந்திரி ! வந்திருக்கக்கூடிய ஏழைமக்கள் யார் தெரிவிப்பாய் !

மந்திரி :-மகானுபாவா ! நமது நாட்டிற்குள் இருக்கக்கூடிய ஏழை நாவித மக்கள். அவர்கள் பங்காளியின் மகன் சேனு என்பவன், இவர்களை கொடுமை செய்து வருவதாக இந்த ஏழைமக்கள் வந்து முறையிடுகிருர்கள். இதை முக்கியமாக கவனிக்கவேண்டும் மகானுபாவா.

செல்வன் :-பிதா ! நமஸ்கரிக்கின்றேன். பாண்டுரங்கனை துதிசெய்து, உன் திராவினையை தீரும்படி பாண்டுரங்கனை வேண்டுதல் செய்துவந்தேன். இதோ! நிற்கக்கூடியவர்கள் யார்?

கனக :- செல்வா ! இவர்கள் நமது நாட்டில் உள்ள நாவிதமக்கள். இவர்கள் பங்காளியின் மகன். சேனு என்பவன், இவர்களை கொடுமை செய்வதாக இந்த ஏழைமக்கள் வந்து முறையிடுகிருர்கள் செல்வா.

செல்வன் :-ஏ, ஏழை நாவிதமக்களே ! ஒருபுறமாக அமருங்கள். மந்திரி ! இந்த ஏழைமக்களை கொடுமைசெய்த சேனு என்பவனை கண்டுபிடித்து கட்டிக்கொண்டு வருவாய். தாமதிக்காமல் செல் !

மந்திரி :-மகாராஜா ! தங்கள் சட்டப்படி சேனுவை கொண்டுவருகிறேன் நமஸ்காரம்.

10. சேனு அரிசியைகொண்டு கொடுத்து தேவி சமைத்து போட்டுசேனுவை ஊருக்குள் வேலைக்கு அனுப்புகிருள்

தேவி :-என்னுங்க ! கடிப்பான் இல்லாம வெட்டிக் கஞ்சியை காச்சி வச்சிருக்கேன் அதை குடிச்சி விட்டு ஊருக்குள்ளே போய் மொட்டை அடிச்சமட்டும் பணத்தை கொண்டுகிட்டு வாங்க.

சேனு :-தேவி ! காய்ச்சின கஞ்சி எனக்கு வேண்டாம். நான் ஊருக்குள் சென்று வேலையை செய்து பணம் கொண்டு வருகிறேன். நீ கவலைப்படாமல் இரும் தேவி. குழந்தை நிர்மலா ! பாண்டுரங்கனை நான் வருமட்டும் பூஜித்துக்கொண்டு இரம்மா. நான் போய் வந்துவிடுகிறேன்.

நிர்மலா :-அப்பா ! நான் பாண்டுரங்கனை பூஜிக்கிறேன். சீக்கிரமாய் போய் வந்திடுங்கப்பா.

தேவி :-என்னுங்க ! அப்பனும் மகளுமா கொஞ்சிகிட்டு இருக்கிங்கோ ; வீட்டை விட்டு வெளியே போங்க. அடி நிர்மலா ! உங்கப்பா போய்தொலைஞ்சாரு வாடி வீட்டுக்குள் போகலாம்.

சேனு :-ஸ்ரீ பாண்டுரங்கா ! என் மனைவியிடம் படும் தொல்லை பெரியதொல்லை. என்னுல் ஒன்றும் சகிக்கமுடியவில்லை. இன்றைக்கு எப்படியாவது என் மானத்தைக் காப்பாற்றவேண்டும் பாண்டுரங்கா !

மந்திரி :-சேனு ! இப்படி திரும்பிப்பார் உன்னை செல்வ மகாராஜா கட்டி பிடித்துக்கொண்டு வரச் சொன்னுர். புறப்பட்டு வா போகலாம்.

சேனு :- சுவாமி ! நான் மகாராஜாவை என்ன குற்றம் செய்தேன். ஒன்றும் செய்யவில்லையே ! என்னை விடுங்கள். ஊர் குடிகளுக்கு வேலைசெய்து என் மனைவிக்கு பணம் கொண்டு தரபோகிறேன்.

மந்திரி :-அடே சேனு ! உன் உடன் பங்காளிகளை துரோகம் செய்து ஊருக்குள் பணம் சம்பாதித்து, உன் மனைவிக்கு கொடுக்கப்போகின்ருயா என்ன

கர்வம், உன் கர்வத்தை அடக்கத்தான் மகாராஜா வரச்சொன்னுர் சீக்கிரம் நடந்து வா.

11. தேவி தன் புருஷனை வெளியே தள்ளி கதவைத் தாளிட்டுக்கொண்டு நிர்மலாவை விஷத்தைக் கொடுத்து கொல்லுகிருள்.

நிர்மலா :—சித்தியம்மா ! கீழே படுங்கம்மா கால் கைகளை நோய்தீர பிடித்துவருகிறேன்.

தேவி :—அடியம்மா ! உங்கப்பா கண்ணிலே தண்ணீர் வந்துவிடும் வேண்டாண்டி அம்மா. நீ போய் அந்த பாண்டுரங்கனை பூஜித்துக்கொண்டு இரும். நான் சமைத்த சட்டி பானைகளை கழுகி போட்டு வாறேன்.

நிர்மலா :—சித்தியம்மா ! நீங்க படுத்திருங்கம்மா, அந்த வேலையை நான் செய்துவிட்டு வர்றேனம்மா.

தேவி :—நிர்மலா ! இன்னிக்கு வேண்டாம். அந்த வேலைகளை நாளைக்கு செய்வே, சுவாமியை கும்பிட்டு கிட்டிரு நான் செய்துவிட்டு வர்றேன்.

நிர்மலா :—ஏ ! பாண்டுரங்கா, எங்கப்பாவிடம் போய் ரொம்ப பணத்தை கொடுத்தனுப்பவேண்டும் பாண்டுரங்கா ! என்னை பெற்ற தாயைப்போல், என் சிறிய தாயாருக்கு நல்ல குணத்தை கொடுக்கவேண்டும் பக்தவத்ஸலா.

தேவி :—சக்காளத்தி மகளை இந்த பாலுக்குள் விஷத்தை ஊற்றிக் கலந்து சாகடிக்காவிட்டால் என் பெயர் தேவியா, இல்லை.

அடி நிர்மலா ! பாண்டுரங்கனை பூஜித்துவிட்டாயாம்மா. சீக்கிரமாக வாடி.

நிர்மலா :— சித்தியம்மா ! இதற்குள் வேலை எல்லாம் செய்துவிட்டாயா ? என்னம்மா சங்கதி சொல்லுங்க, நான் பாண்டுரங்கனை பூஜிக்கப்போகிறேன்.

தேவி :—ஒன்றுமில்லேடி ! இந்த பாலை குடித்து விட்டு போய் பாண்டுரங்கனை நன்று பூஜித்துகொண்டிரும். இந்தா ! சீக்கிரம் சாப்பிடு.

நிர்மலா :-சித்தியம்மா! பாலைக் குடித்தபோது, பால் நன்ருக இருக்குதே.

தேவி :-நிர்மலா! சீக்கிரம் பாண்டுரங்கனைப் போய் பூஜித்துக்கொண்டிரம்மா.

நிர்மலா :-ஐயோ! அம்மா!! என் வயிற்றை வலிக்கிறதே! என்னம்மா செய்வேன்.

தேவி :-நிர்மலா! ஒண்ணுமில்லேடி பயப்படாமே, பேசாமே இரம்மா.

நிர்மலா :-ஆ! பாண்டுரங்கா, என் ஆத்மா என்னைவிட்டு பிரிகிறது, நீயே துணை.

தேவி :-சக்காளத்தி மகள் பிராணத்தை விட்டு தொலைந்தாள். நாம் சஞ்சலமில்லாமல் சாப்பிட்டு சந்தோஷமாக இருக்கலாம்.

12. மகாராஜன் மந்திரிசேனுவை அழைத்துக்கொண்டு வரவில்லை என்று செல்வமகாராஜனை கேழ்க்கிருர். நாவிதர்கள் எல்லோரும் பொருமை சொல்லுகிருர்கள்.

கனக :-செல்வா! மந்திரி போனவன் சேனுவை இன்னும் அழைத்துக்கொண்டு வரவில்லை, காரணம் என்ன!

செல்வன் :-பிதா! விஷயத்தை கண்டறிந்தால் தான் தெரியும், கொஞ்சம் பொறும் பார்க்கலாம்.

கந்தன் :-மகாராஜா! அவன் பெரிய போக்கிரிங்க, பிடிக்கப்போன மந்திரியைக்கூட அடிப்பாங்க. அவன் இங்கே வந்ததும், தக்க தண்டனை கொடுக்க வேண்டும்படி கேட்டுக்கொள்ளுகிருேம் மகாராஜா.

மந்திரி :-மகானுபாவா! நமஸ்காரம். இந்த கொடிய பாதகனுக்கு ஈவிரக்கம் பார்க்காமல் சித்ர வதை செய்யும்படி உத்திரவு அளிக்கும்படியாக மந்திரி கேழ்க்கும் விண்ணப்பம் மகாராஜா.

செல்வன் :-அடே சேனு! நீ நாவிதகுலத்தில் பிறந்து நாட்டில் வரும் வருமானத்தை நீயே அநுபவித்துக்கொண்டு, இந்த ஏழைமக்களை அன்னந் தண்ணீர் இல்லாமல் சாகடித்த படுபாவி உன்னை, ஜாட்டி

யால் அடித்து, ஈட்டியால் குத்தி சித்ரவதை செய்ய உத்ரவளித்தேன். மந்திரி, இவனை ஜெயிலுக்குள்ளே அழைத்துச் சென்று, என் சட்டப்படி செய்துவிட்டு, மற்ற வேலைகளை செய்யவேண்டும். சீக்கிரம் அழைத்துக்கொண்டு போ!

சேனு :—மகாராஜா! ஆய்ந்து, ஓய்ந்து பார்க்காமல், அரசர்கள் வீண் பழியை சுமத்திக் கொள்வது, அரசாங்கத்திற்கு நீதி அல்ல, நீதி முறைப்படியாக, ஆராய்ச்சி செய்யும்படி, இந்த அடியேன் அடிவணங்கினேன் மகாராஜா!

மந்திரி :—அடே சேனு! உன் கல்வி எல்லாம் இவ்விடம் செல்லாது நடந்து வா.

சேனு :—சுவாமி என்னை அடிக்காதீர்கள் நான் வருகிறேன் சுவாமி.

கனக :—செல்வா! சேனு கொஞ்சம் ஞானம் உடையவன்போல் தெரிகிறதே, இவனை இந்த முறை மன்னித்துவிடப்பா, பின்னால் பார்க்கலாம்.

செல்வன் :—பிதா! சேனுவின் பேரில் இரக்கம் என்பதே வேண்டாம். அவ்வார்த்தையை விடும். அடே நாவித மக்களே நீங்கள் எல்லோரும் நாட்டிற்கு சென்று அங்குள்ள வேலைகளை எல்லாம் செய்து பிழைத்துக் கொள்ளுங்கள்.

கந்தன் :—மகாராஜா! உங்கள் அரசும், செங்கோலும் சுகமாக இருக்கனுங்க. நாங்க எல்லாருமா போய் வர்றேனுங்க மகாராஜா!

ஏண்டா பசங்களே நிக்கிறீங்க, வாங்கடா வீட்டிற்கு போகலாம்.

13. *அரசன் சட்டப்படி மந்திரி சேனுவை ஜெயிலுக்குள் அழைத்துச் சென்று உயிர்வதை செய்கிறான்.*

மந்திரி :—அடே சேனு! இந்த வீர ஜாட்டியின் அடியைப்பட்டு உன் ஆவியை விட்டு உன் கட்டையை கீழே போடும் சண்டாளா!

சேனு :-ஆ ! பாண்டுரங்கா ! அடித்த அடியானது அங்கம் துடிக்கிறது. ஆத்மா பிரிகிறது, பாண்டு ரங்கா ! நீயே ரக்ஷிப்பாய்.

மந்திரி :-என்ன ஆச்சர்யம் ! ஜாட்டியால் சேனுவை அடித்தும் உயிர் விடவில்லையே. அடே சேனு ! இதோ ஈட்டியால் குத்தி உன் உயிரை எமனிடம் ஓட்டுகிறேன் பார். சபாஷ் சண்டாளன் உயிர் கடந்து விட்டான். இந்த ஜெயிலை சாற்றி பூட்டிக்கொண்டு போய் மகாராஜனிடம் தெரி விக்கலாம்.

மகாராஜா ! நமஸ்காரம் தங்கள் சட்டப்படி சேனுவை உயிர்வதை செய்துவிட்டேன்.

கனக :-செல்வா ! செல்வா ! எனக்கு மயக்க மாகத்தான் இருக்கிறது என்னை பிடித்துக்கொள்.

செல்வன் :-மந்திரி என்ன மோசம். என் பிதா என்னை மோசம் செய்துவிட்டாரே. ஆஹா ! மந்திரி பிதாவைப் பிடித்துக்கொண்டு அறைக்குள் சென்று படுக்கையின்மேல் வளத்தலாம் வாரும்.

மந்திரி :-மகாராஜா! மெதுவாக, மகானுபாவனை படுக்கையின்மேல் வளர்த்துங்கள்.

செல்வன் :-பிதா ! நமது பாண்டுரங்கன் உம்மை கைச்சோரவிட்டு விட்டாரே ! என் செய்வேன்.

கனக :-செல்வா ! பயப்படாதே பாண்டுரங்கன் என்னை கைவிடமாட்டார் சீக்கிரம் சென்று பாண்டு ரங்கனை பூஜித்துக்கொண்டிரும் என் நிலைமை என் னிடம் வந்துவிடும். மந்திரி செல்வனை அழைத்துக் கொண்டு போ.

மந்திரி :-மகானுபாவா ! அப்படியே. மகாராஜா வாருங்கள் போகலாம்.

**14.** செல்வன் பாண்டுரங்கனை பூஜிக்கப் போகிறார் கனக மகாராஜனுக்கு பாண்டுரங்கன் வைத்தியராக வந்து வியாதியை தீர்க்கிறார்.

கனக :-அய்யோ! பாண்டுரங்கா, ஒரு வினுடிக்கு விஞடி கால் கைகள் எல்லாம் குறைவுபட்டு போகிறதே இவ்வேளை வந்து என்னை காத்து ரக்ஷிக்க மனயிரக்கமில்லையா, பாண்டுரங்கா.

வைத்தியர் :-மகாராஜா! நமஸ்காரம். தங்களை காணும்படியாகத்தான் வந்தேன்.

கனக :-அப்பா! நீயார், இங்கே எதற்காக வந்தாய் சொல்லப்பா.

வைத்தியர் :-மகாராஜா, நான் பெரிய வைத்தியன். உங்கள் நோயை தீர்க்கத்தான் வந்தேன்.

கனக :-வைத்தியரே! சந்தோஷம். அப்படியானல் என் வியாதிகளை தீர்த்தால் ஒரு வண்டி பொன் தருகிறேன் வைத்தியரே.

வைத்தியர் :-மகாராஜா! எனக்கு பொன் வேண்டாம், என் குரு சேனுநாவிதனை நீதி இல்லாமல் ஜெயில் தண்டனை செய்து இருப்பதை விலக்கி தங்களுக்கு அடிமைத் தொழில் செய்து வரும்படி இப்பொழுதே உத்திரவு கொடுத்தால், இக்ஷணமே தங்கள் நோயை தீர்த்துவிடுகிறேன் மகாராஜா. தங்கள் சம்மதம் எப்படியோ.

கனக :-வைத்தியரே அதுதானு பிரமாதம், அப்படியே செய்து விடுகிறேன்.

வைத்தியர் :-மகாராஜா! கொஞ்சம் இருங்கள் மருந்துகளை சேர்த்து தருகிறேன் மகாராஜா.

15. பாண்டுரங்கன் மகாராஜாவுக்கு மருந்துகளை கூட்டுகிருர். ஜெயிலுக்குள்ளே பாண்டுரங்கன் சமையல் காரனுக வந்து சேனுவுக்கு உயிரைக் கொடுத்து அன்னமிடுகிருர்.

சமையல் ஆள் :-அடே அப்பா சேனு! சீக்கிரம் இவ்விடத்தைவிட்டு எழுந்திரப்பா.

சேனு :-சுவாமி நீங்கள் யார். இந்த ஜெயிலுக்குள்ளே எப்படி வந்தீர்கள்.

ச. ஆள் :-சேனு. நான் மகாராஜா வீட்டு சமையல் வேலைக்காரன். உனக்கு சாப்பாடு கொண்டு வந்தேன். இதை சாப்பிட்டு இரும். இன்னும் ஒரு விநாடிக்குள் உன்னை ஜெயிலில் விடுதலை செய்து மகாராஜா அவர்களுக்கு வேலை செய்யும்படியாக மகாராஜா ஒரு வைத்தியருக்கு ஒப்பந்தம் கொடுக்க போகிறார் பயப்படாமல் இரும் சேனு.

சேனு :-சுவாமி : தங்கள் வாக்கியத்தின்படி நடந்தால் போதுமானது.

ச. ஆள் :-சேனு ! ஒரு விஷயம் உனக்கு அன்ன மிட்டதாகவும் நடக்கும் விஷயங்களை சொன்னதாகவும் மகாராஜனிடம் சொல்ல வேண்டாம். அப்படி தெரிந்துவிட்டால் என்னை வேலையைவிட்டு நிறுத்தி என்னையும் தண்டித்து விடுவார் சேனு.

சேனு :-சுவாமி ! என் உயிர் உள்ளவரையில் சொல்லவில்லை சுவாமி.

ச. ஆள் :-சேனு ! மகாராஜா வராமுன்னே நான் போய் விடுகிறேன்.

16. தேவி, நிர்மலா உயிர்விட்டு கிடப்பதைப் பார்த்து சந்தோஷப்பட்டு, கொம்பினுல் அடிக்கபோகிறாள் அவ் வேளை பாண்டுரெங்கன் அவள் புருஷனுக உருமாறி பணமூட்டையை கொண்டு தருகிறார்.

தேவி :-நான் நினைத்த சபதம் நிறைவேறி விட்டது இன்று முதல் நமக்கு ஒரு கஷ்டமில்லை. நமது புருஷன் வருவதற்குள்ளாக நிர்மலாவை தடியினுல் அடித்து மண்டையை உடைத்து உதிரம் காண வைத்தால் புருஷன் வந்ததும் வீண் பழியை சுமத்தி நாம் தப்பித்துக்கொள்ளலாம். இதுதான் சரியான வழி. இந்த தடிக்கொம்பினுல் அடிக்கலாம். அடி சண்டாளி நிர்மலா ! இதோ உன் மண்டையை உடைக்கிறேன் பார். ஐய்யோ ! தெய்வமே ! இது என்ன கொள்ளை, தூக்கின

கையை கீழே இரக்க முடியவில்லையே. என்ன செய்வேண்டா, ஈஸ்வரா.

மாயபுருஷன் :-தேவி! அங்கே என்னடி செய்து கிட்டிருக்கே. பண மூட்டையை இரக்கி தொலை யேண்டி, அடே அப்பா பாரம் கொள்ளவில்லை.

தேவி :-என்னுங்க! பணமூட்டையை அப்படி போட்டுவிட்டு என் கதியை வந்து பாருங்க.

மா. புருஷன் :-தேவி! உன் கதி அப்படி இருக் கட்டும் குழந்தையை இக்கதி செய்தவள் நீ தானு! சண்டாளி உன் வயிற்றில் பிறந்திருந்தால் இக் கோலத்தை செய்திருப்பாயா. இந்த கோலத்தை செய்தவர் யார்?

தேவி :-அடக்கடவுளே! இவளை உயிருக்குயிராய் வளர்த்தது, அந்த பாண்டுரங்கனுக்குத்தான் தெரிய வேண்டும். குழந்தையை பாம்பு கடித்து கீழே விழுந்துவிட்டாள், அந்த பாம்பை அடிக்க இக் கொம்பை எடுத்த பாபம்தான் இக்கதியாச்சுது. வீணுகை என் பாபத்தை ஏன் கொட்டிக்கொள்ள வேண்டும்.

மா. புருஷன் :-தேவி, பாம்பு கடித்தது உண்மை தானு, பொய்தானு.

தேவி :-பிராணபதி. உண்மைதான், என்னை மனம் சோதிக்க வேண்டாம்.

மா. புருஷன் :-நான் மனம் சோதிக்கவில்லை; குழந்தையை கடித்த பாம்பு எவ்வழியாக போச்சு. அந்த வழியை காண்பியும் தேவி.

தேவி :-இந்த வழியாகத்தான் போச்சு. அதை எப்படி கண்டு பிடிக்க முடியும்.

மா. புருஷன் :-ஏன் கண்டுபிடிக்க முடியாது! இதோ பாம்பு வருகிறது பாரும் தேவி.

தேவி :-ஐய்யய்யோ! என்னைக் கடிக்க பாம்பு துரத்திக்கொண்டு வருகிறதே, பிராணபதி என்னைக் காப்பாற்றுங்கள்! காப்பாற்றுங்கள்.

மா. புருஷன்:-பாழும் பாம்பே, என் குழந்தையை கொன்றுவிட்டு மறுபடியும் என் மனைவியை கொல்ல வந்தாயா? அங்கேயே நில். தேவி குழந்தையை கடித்த பாம்பு, இந்த பாம்புதானு? உண்மையை சொல்லிவிடும், இல்லாவிட்டால் கட்டாயம் உன்னை கடித்துவிடும்.

தேவி:-பிராணபதி, இந்த பாம்பு குழந்தையை கடிக்கவில்லை. குழந்தைக்கு பலவித கஷ்டங்கள் கொடுத்தவள் நான்தான். என்னை மன்னித்து ரக்ஷிப்பது உன் கடமை பிராணபதி.

மா. புருஷன்:-கொலை செய்த சண்டாளியை மன்னிக்க நானல்ல. இதோ பாம்பாக வந்து நிற்கக் கூடிய பாண்டுரங்கன்தான் உன்னை மன்னிக்க வேண்டும். அவர் காலில் விழுந்து சேவித்துக்கொண்டு எழுந்திரு. உன் கையும் நன்ருகிவிடும். குழந்தைக்கும் உயிர் வந்துவிடும். விழுந்து சேவித்துக்கொள்ளும் தேவி.

தேவி:-பிராணபதி: அப்படியே சேவித்துக் கொள்ளுகிறேன். ஓ! பாண்டுரங்கா! உன் மகிமையை அறியாமல்படி, உன்னை தூஷித்தேன். என் புருஷனையும் பலவித அக்கிரமத்திற்குள்ளாக்கினேன். குழந்தை நிர்மலாவையும் விஷத்தைக் கொடுத்துக் கொன்றேன். இன்றேடு என் மூர்க்க குணங்களை அடக்கி உன் பாரமே கதியென்று அடைந்தேன். இது சத்தியம், குழந்தைக்கு உயிர் கொடுத்து என்னையும் ரக்ஷிக்க வேண்டும் பாண்டுரங்கா!

நிர்மலா:-அப்பா! இவ்வளவு நேரம் என்னடப்பா. செய்திகிட்டு இருந்தீங்க. பாண்டுரங்கன் பணம் கொடுத்தாரா சொல்லப்பா!

மா. புருஷன்:-நிர்மலா! பாண்டுரங்கன் பணத்தை கொடுத்தாரம்மா! உன் சிற்றன்னை பாண்டுரங்கனுக்கு அவள் உறுதி வாக்கு கொடுத்து கீழே படுத்துக்கொண்டு இருக்கிருள், அவளை எழுப்பி

விடம்மா, நான் மகாராஜா வீட்டிற்கு வேலைக்குப் போக வேண்டும்.

நிர்மலா :-அப்பா ! இதோ எழுப்புகிறேன், சித்தியம்மா, அப்பா, மகாராஜா வீட்டிற்கு வேலைக்கு போகவேண்டுமாம். எழுந்திரும் சித்தியம்மா.

தேவி :-நிர்மலா ! உன்னை நான் செய்த கொடுமையை பாண்டுரங்கன் பார்த்து, பாம்பாக வந்து, என்னை பயமுறுத்தி, என் உறுதி வாக்கைக் கேட்டு, உன்னையும் என்னையும் சீர்திருத்தம் செய்து பாம்பாக வந்த பாண்டுரங்கன் மறைந்துவிட்டாரம்மா.

நிர்மலா :-அப்பா ! அம்மா சொல்வது உண்மை தானப்பா, சொல்லுங்கள்.

மா. புருஷன் :-நிர்மலா, உண்மைதான், தேவி குழந்தையை வைத்துக்கொண்டு, பாண்டுரங்கனை மறவாமல் பூஜித்துக் கொண்டிருங்கள். நான் மகாராஜா வீட்டின் வேலையைச் செய்து வருகிறேன்.

நிர்மலா :-சித்தியம்மா ! அப்பா வேலைக்குப் போகட்டும். நீங்க வாங்கம்மா, பணத்தை எடுத்து பெட்டியில் போடலாம். அப்பா ! நீங்க சீக்கிரம் போய்வாருங்கள்.

மா. புருஷன் :-"நிர்மலா ! பாண்டுரங்கனை மறவாமல் பூசை செய்துக்கொண்டு இருங்களம்மா" என்று சொல்லி பாண்டுரங்கன் போய்விடுகிறார்.

17. பாண்டுரங்கன் வந்து கனக மகாராஜனுக்கு கூட்டிய மருந்தை கொடுத்து வியாதியைத் தீர்த்து, சேனுவை மீட்டு ராஜனிடம் வேலைக்கமர்த்தி சுவாமி வந்து விடுகிறார்.

வைத்தியர் :- மகாராஜா ! நோய்கள் எல்லாம் தீர்ந்து, தங்கள் திரேகம் பரிசுத்தமாய்விட்டதா, இன்னும் ஏதேனும் இருக்கிறதா ?

க. ராஜன் :-வைத்தியரே ! தங்கள் கிருபையால். நோய்களெல்லாம் தீர்ந்து என் திரேகம், எப்பொழு

தும்போல் சுகமாய்விட்டது, வாருங்கள் குழந்தை செல்வனிடம் போகலாம்.

மந்திரி :-மகாராஜா ! இவ்வளவு நேரம் பாண்டு ரங்கனை துதிசெய்யாமலும், என்னிடம் வாய்விட்டு பேசாமலும் கண்களை மூடி மௌனத்தை சாதிக்கின்றீர்களே, என்ன காரணம். "ஆஹா மகாராஜா வுக்கு என்ன தீவினையோ, தெரியவில்லை, கனகமகா ராஜனிடம் சென்று தெரிவிக்கலாம்." மகானுபாவா ! நமஸ்கரிக்கின்றேன்.

க. ராஜன் :-மந்திரி ! குழந்தை செல்வன் பாண்டு ரங்கனை பூஜித்துவிட்டானு.

மந்திரி :-மகானுபாவா ! மகாராஜன் வெகு நாழி யாக உட்கார்ந்தவர், உட்கார்ந்தவர்தான். இன்னும் வாய்பேச்சு வெளிவரவில்லை மகானுபாவா ! எனக் கொன்றும் விளங்கவில்லையே.

க. ராஜன் :-என்ன விபரீதம் ! செல்வா ! செல் வா !! வைத்தியரே ! குழந்தை என்னிடம் பேச வில்லையே, என்ன பாருங்கள்.

வைத்தியர் :- மகாராஜா ! ஒன்றுமில்லை முன்ன தாக மந்திரியை விட்டு சிறையிலிருக்கக்கூடிய சேன நாவிதனை அழைத்துவரச் சொல்லுங்கள். இளவர சனை தங்களிடம் பேசும்படி செய்கிறேன்.

க. ராஜன் :-வைத்தியரே! அப்படியே ! "மந்திரீ சேனவைச் சீக்கிரம் அழைத்துக்கொண்டு வா.

மந்திரி :-மகானுபாவா ! என்னை மனம் சோதிக்க வேண்டாம். உயிர்விட்டு கிடக்கும், சேனநாவிதனை எப்படி உயிர் கொடுத்துக்கொண்டு வரமுடியும் !

வைத்தியர் :-மகாராஜா! உன் மந்திரி சொல்வது எல்லாம் பொய் ! சேனவின் உயிர் போகாமல் ஜெயி லுக்குள் நன்ருகத்தான் இருக்கிருன். வந்துபாருங்கள்.

க. ராஜன் :-மந்திரி ! உன்னுடைய பொய் வார்த் தைகளை இன்றுதான் கண்டறிய போகின்றேன், சீக் கிரம் ஜெயிலை திறந்துவிடும்.

மந்திரி :- மகானுபாவா! நான் பொய்யனல்ல, உன்னுடன் வந்திருக்கக்கூடிய வைத்தியன், மகா பொய்யன். ஜெயிலுக்குள் வந்து பாருங்கள்.

சேனு :-"பாண்டுரங்கா! பண்டரிநாதா! என்னைச் சிறையை நீக்கி மகாராஜனுக்கு, அடிமைத் தொழிலைச் செய்துவரும்படி, உத்திரவுகொடுக்க இன்னும் மனம் இறங்கவில்லையா! பாண்டுரங்கா!

க. ராஜன் :-மந்திரி! இன்றோடு என்னரசாங்கத்திற்கு நீ யோக்கியனுகமாட்டாய், அரசனை துரோகம் செய்த சண்டாளன், நீ வெளி வரவேண்டாம், சிறைச்சாலையே கதியாக இரும். வைத்தியரே! சேனுவை அழைத்துக்கொண்டு வெளியே வாருங்கள். ஜெயிலின் கதவுகளை பூட்டிக்கொள்ளவேண்டும்.

வைத்தியர் :-சேனுவை அழைத்துக்கொண்டேன் மகாராஜா, வாருங்கள் போகலாம்.

க. ராஜன் :-ஏ சேனு! ஜெயிலுக்குள் இருந்ததைப்பற்றி மனவியாக்கூலப்படாமல் வா! வைத்தியரே குழந்தை செல்வன் வாய்ப்பேச்சு இல்லாமல், பாண்டுரங்கனிடம் உட்கார்ந்து, மௌனத்தை சாதிக்கின்றனே, கொஞ்சம் எழுப்பிவிடுங்கள் வைத்தியரே.

வைத்தியர் :-மகாராஜா! இளவரசனை நான் தொடக்கூடாது, நீங்களே தட்டி எழுப்புங்கள். இளவரசர் தங்களுடன் பேசுவார்.

க. ராஜன் :-வைத்தியரே அப்படியே! குழந்தாய் செல்வா! பாண்டுரங்கனை தியானிப்பதை விட்டு, எழுந்திருமப்பா ?

செல்வன் :-பிதா! நமஸ்கரிக்கின்றேன். தங்களுடன் இருப்பவர்கள் யார்? இவர்கள் ஏன் இங்கு வந்தார்கள், தெரிவியும் பிதா ?

க. ராஜன் :-செல்வா! இவர் என் நோயைத் தீர்த்த வைத்தியர். இவன் சிறையில், அடைத்த சேனுநாவிதன். இந்த நாவிதனல் என் வெண்

குஷ்டம் நீங்கி, திரேகம் பரிசுத்தமாக இருக்கிறது செல்வா.

செல்வன் :-பிதா! உயிர்க்கடந்த சேனுநாவிதன் எப்படி மீண்டுவந்தான்.

க. ராஜன் :-செல்வா! நம்மிடம் இருக்கக்கூடிய மந்திரி சேனுநாவிதனை உயிர்வதைச் செய்யாமல் நம்மிடம் வீண்புரளிச் செய்து இருக்கிறுன். சேனு ஜெயிலுக்குள் உயிருடன் இருந்து வெளிவந்தான்.

செல்வன் :-பிதா! அந்த படுபாவி! வீண்புரளிச் செய்த மந்திரியை என்ன செய்தீர்கள்.

க. ராஜன்:-செல்வா, அவனைச் சிறையிலடைத்து சேனுவை மீட்டுக்கொண்டு உன்னிடம் வந்தேன், இந்த வைத்தியர் இஷ்டப்படி நாம் நடக்கவேண்டும் செல்வா! உன்னுடைய சம்மதம் எப்படி.

செல்வன் :-பிதா! உன் இஷ்டத்தின்படி நான் நடக்கக்கடவேன். வைத்தியரே, நமஸ்கரிக்கின்றேன். தங்கள் வாக்கியத்தின்படி நடக்க அடியேன் கார்த்துக் கொண்டு இருக்கிறேன் வெளியிடுங்கள்.

வைத்தியர் :-இளவரசே! இதோ நிற்கக்கூடிய சேனுநாவிதனை தங்களுக்கு அடிமைத்தொழில் செய்ய வைத்துக்கொண்டு, சேனுநாவிதனை உயிருக்குயிராக பாதுகார்த்து வரும்படிக் கேட்டுக்கொள்ளுகிறேன் இளவரசே.

செல்வன் :-வைத்தியரே! என் தந்தைக்கு தீராப் பிணியைத் தீர்த்த, வைத்தியர் சொல்படி நடக்க யான் தயார். இன்னும் என்ன தேவை.

வைத்தியர் :-மகாராஜா! ஒன்றும் வேண்டாம் நான் போய்வருகிறேன். (சுவாமி போய்விடுகிருர்.)

18. 19 தலைக்கட்டு நாவிதமக்கள் ஊருக்குள் வந்து ஆளுக்கொரு வீதியாக பாகித்துக்கொண்டு குடிகளுக்கு வேலை செய்து வருகிருர்கள்.

கந்தன் :-ஏண்டா! தாண்டவராயா! ஆளுக்காளா முளிச்சிகிட்டு நிக்கிறீங்க, ஆளுக் கொருத் தெருவாப் போய் வேலையைச் செய்யபோங்கடா.

தா. ராயன் :- கந்தா! அப்படித்தான் செய்து கிடரோம், உன் வேலையைப் போய்பாரும். அடே செவிட்டுக் காக்கா! நம்ப முனுசாமிகவுண்டர் தெருவிலே. வேலையைச் செய்யப்போடா. "அடே நாராயணு சொல்லச் சொல்ல பேசாமெ நின்னுகிட்டு இருக்கானெ, அடே அண்ணே காக்கா! காதுக் கேக்கலியா, சனியம் புடிச்சவனே!

காக்கா :-ஏண்டா அறிவுக்கெட்டவனே, உனக்கு புத்தி இருக்குதா, இல்லையா. நான் சாப்பிட்டு எட்டு நாளாகிறது, என்னை வந்து சாப்பிட்டையான்னு கேக்கிறையே, நான் எங்கேடா சாப்பிட்டேன்.

தா. ராயன் :-அடே நாராயணு! நான் தெரியாமெ வந்து இவன்கிட்டே மாட்டிக்கிட்டேனே, அடே அண்ணே காக்கா! முனுசாமி கவுண்டர் தெருவிலே வேலைக்குப் போடா, காது கேட்டுதா.

காக்கா :-ஏண்டா, நான் ஒருவாட்டி சொல்றனே, உனக்கு காது கேக்கலே. எண்ணிக்கு பார்த்தாலும் இப்படியேதான் சத்தாச்சிக்கிட்டு வர்றே! விட்டக் குத்து போதுமா, இன்னும் வேணுமா.

தா. ராயன் :-ஐய்யய்யோ! இங்கே எவனையும் கூட காணுமே, என்னத்தை செய்வேண்டா, கடவுளே, சரி! இவன் தலையை பிடிச்சு, காதுகிட்டே சொல்லிவிட்டு ஓடி பூடலாம். இதுதான் நல்ல யோசனை, அடே அண்ணே! செவிட்டுக் காக்கா, உன்னை போய் அந்த முனுசாமி கவுண்டன் தெருவிலே வேலையைச் செய்யச் சொன்னுங்கடா.

காக்கா :- அட பைத்தியக்காரா, இப்பொ சொன்னமாதிரியா, அப்பவே சொல்லக்கூடாதா, சரி, சரி, நீ போடா, நான் வேலையைப் பார்த்துகிடறேன்

(என்று சொல்லி காக்கா, முனுசாமி கவுண்டர் வீதிக்கு வேலேக்கு வருகிருன்).

19. திருப்பதியில் நாவிதர்களுக்கு கட்டளே சரியாக கொடுக்கவில்லே என்று வேலேயைவிட்டு நின்றுவிடு கிருர்கள். பட்டாச்சாரியார் மவுந்துவை செல்வமகா ராஜனிடம் அனுப்பி, அங்குள்ள நாவிதர்களே அழைத்து வரும்படி, யானேயிலேற்றி அனுப்புகிருர்.

மவுந்து:- என்னுங்க, பட்டாச்சாரியார் நம்ம தேவஸ்தானத்தில் இருக்கக்கூடிய, நூறு தலேக்கட்டு நாவிதர்கள். வருஷவாரியாக சரியாக, கவனித்து, வரக்கூடிய பிரார்த்தனே மக்களுக்கு மொட்டையை அடிக்கும் வேலேயைச் செய்யவில்லேயே, நாளேப் பிறக் கக்கூடிய புரட்டாசிமீ நாலாம் சனிக்கிழமையில், வரும் ஜனங்களுக்கு, எப்படி மொட்டை அடிக்கப் போகிருர்களோ, ஒன்றும் புலப்படவில்லே.

பட்டாச்சாரி:-ஆமாமய்யா, ஆமாம், உலகமுழு தும், திருப்பதி நாவிதர்கள் என்ருல், கொஞ்சம் நாண யம் கெட்டுத்தான் பேசுகிருர்கள். நல்ல வேளேயா நீங்களும் சொல்ல வந்துவிட்டீர்கள், கொஞ்சம் இருங் கள். இதோ! நாகரத்தினம் நாவிதன், மேளத்தை அடித்துக்கொண்டிருக்கான், அவனே அழைத்து, இப் போதே கேட்டுவிடறேன். உங்கள் சம்மதம் எப்படி.

மவுந்து:-என் சம்மதம் என்னய்யா! நாகரத்தி னத்தைக் கூப்பிடுங்கள்.

பட்டாச்சாரி:- அடே நாகரத்தினம் நாவிதா! மேளத்தை அப்புறமா அடிப்பே, இங்கே வாடா.

நா. ரத்தினம்:- சுவாமி இதோ வந்துட்டங்க! விஷயம் என்னுங்க.

பட்டாச்சாரி:-ஒண்ணுமில்லேடா, இந்த வரு ஷம் திருப்பதிக்கு வரக்கூடிய பிரார்த்தனேமக்களுக்கு மரியாதையாய் மொட்டை அடித்துவிடப் போறீங்

களா அல்லது வருஷவாரியாய் செய்வதுபோல் செய்யப்போறீங்களா.

நா. ரத்தினம் :-நீங்களும் கேக்ரது ஞாயந்தாங்க, இந்த வருஷத்திலே வீட்டு ஒண்ணுக்கு ஒரு குட்டி புறந்துபோச்சுங்க; கட்டளையை கால்வீசம் ஏத்திட்டிங்கண்ணு மரியாதையா வேலைச் செய்வேங்க, இல்லாமபூட்டா வேலே அப்படியும் இப்படியுமாதான் இருக்குங்க.

மவுந்து :-அடே நாவிதா! கட்டளையை அதிகப்படுத்த முடியாது. வரும் வருமானத்தை நீங்களே அனுபவித்துக்கொண்டால் ஸ்ரீ வெங்கடாசலபதிக்கு நடக்கவேண்டிய வேலைகளெல்லாம் எப்படி.

நா. ரத்தினம் :-சுவாமி! எங்க வெங்கடாசலபதி நாங்க மொட்டை அடிக்கிறகாசிக்காகவா எதிர்பார்த்திருக்காரு அவரு பேரைச்சொல்லி நீங்க சாப்பிட்டா போதாதா சுவாமி. நான் சொன்னேனென்று கோபப் படாதேங்க.

மவுந்து :-அடே நாவிதர்களே! கோவிலைவிட்டு வெளியே போய்விடுங்கள்.

நா. ரத்தினம் :-என்னுங்க! நாங்க ஒண்ணும் நாணங்கெட்ட நாவிதபசங்கள் இல்லெ, அதுமட்டும் உங்க கதையை புடிச்சு கட்டுங்க. அடே பசங்களே! ஏண்டா நிக்கிறீங்க, அவனவன் சாமானை எடுத்துக்கிட்டு வாங்கடா. இந்த திருப்பதியில் நம்ப ஜாதியாருங்க எவன் வந்து வேலே செய்யுறுண்ணு பாக்கலாம்.

மற்றவர்கள் :-அடே அண்ணே! அதுதான் சரியான யோசனை வாங்கடா போகலாம்.

பட்டாச்சாரி :-மவுந்து! இந்த நாவிதர்களுடைய சமர்த்தை நாம் ஒரு கை பார்த்துவிடுவதே சரி. நீங்கள் செல்லமகாராஜனிடம் சென்று, நடந்த விஷயத்தை சொல்லி, அங்குள்ள 20 தலைக்கட்டு நாவிதர்களை அழைத்துவந்து சேருங்கள்.

மவுந்து :-பட்டாச்சாரியார்! அப்படியே போகின்றேன், ஆலயத்தைப் பார்த்துக்கொள்ளுங்கள் என்று மவுந்து செல்வமகாராஜனிடம் வருகிறார்.

20. தேவி என்பவள் பாண்டுரங்கனுக்கு வாக்களித்தபடி நிர்மாலவை முகம் கோணமல் வைத்துக் கொண்டு, பாண்டுரங்கனுக்கு அர்ச்சனை ஆராதனை செய்து வருகிறாள்.

தேவி :-குழந்தை. நிர்மலா! உன் தகப்பனர் பணமூட்டையைக்கொண்டு கொடுத்துவிட்டு மகாராஜனிடம் வேலைக்குப் போனவர் இன்னும் வரவில்லையே நமது பாண்டுரங்கனுக்கு ஆராதனை எப்பொழுது செய்வது.

நிர்மலா :- சித்தியம்மா, மகாராஜா, எங்கப்பாவுக்கு, அதிக கஷ்டமான வேலையைக் கொடுத்தாரோ, என்னமோ தெரியவில்லை. அப்பாவை எதிர்ப்பார்க்க வேண்டாம். பாண்டுரங்கனுக்கு நைவேத்தியம் ஆனந்தமாக நடக்கட்டும் சித்தியம்மா.

தேவி :-நிர்மலா, அப்படியானல் அங்கு இருக்கக் கூடிய வெண்பொங்கல், புளியோதரை, ததியோதனம் கொண்டுவாம்மா.

நிர்மலா :-சித்தியம்மா! எல்லாம் கொண்டுவந்து விட்டேன், வேலை நடக்கட்டும்.

தேவி :-ஓ! கூர்மவதாரா, கோவிந்தா, நரசிம்மா, நாராயணு, பாம்பாக வந்த பரமானந்தா! என்னை சீர் தூக்கிய ஸ்ரீரங்கா, பாண்டுரங்கா! உன் பாதமே கதி. அன்னம் புசிப்பாய் பாண்டுரங்கா.

21. செவிட்டுக் காக்கா நாவிதன், முனுசாமி கவுண்டர் வீதியில் உட்காருகிருன். ஊர் குடிகள் க்ஷவரம் செய்யச் சொல்லுகிருர்கள்.

ராமன் :-அடே! அப்பா காக்கா? இண்ணிக்கு சேனு வரவில்லையா. அவன் போனுபோருன். இப்போ

எனக்கு அழகான தஞ்சாவூர் குடுமி வைக்கணும் என்னடா சொல்ற.

காக்கா :-பூராவும் செய்வங்க சாமி, கத்தி சீமை கத்திதாங்க. இந்தமுறை பண்ணிப்பாருங்க அப் சொல்லுவிங்க.

ராமன் :-காக்கா! அப்படின்னு உன் வேலையை செய்து காமிடா பாக்கலாம்.

காக்கா :-சாமி! குனிஞ்ச தலையை நிமிராமேயும், தலையை அப்படியும் இப்படியுமா ஆட்டாமேயும், கொஞ்சம் பேசாம இருங்க. வேலையை முடிச்சுவிட றங்க, "திருப்பதிக்கு போகா முன்னே நாராயணு திரு மொட்டை அடிச்சுவிட்டேன் கோவிந்தனே." அய்யா கவுண்டரே "கோவிந்தா கோவிந்தான்னு" கோவிந் தம் ஒண் ணு போடுங்க.

ராமன் :- காக்கா! எதுக்கடா கோவிந்தம் போடறது. இருடா தலைக்குமேலே கையை வைச்சி பாக்கிறேன்; கோவிந்தம் அப்புறம் போடண்டா.

காக்கா :-கவுண்டரே! தலைக்குமேலே கையை வைக்காதீங்க. கத்தி பட்டுபுடும். வேண்டாங்க.

ராமன் :-அடே செவிட்டுப் பாவி! தலையை பிடித்து அமித்திகிட்டயே; கழுத்தாம்பட்டை நோவுது தலையை விட்ரா; ஐய்யய்யோ நான் சொல் லச் சொல்ல தலையைக் கீழே அமுக்கிருனே; அடே அப்பா காக்கா! உன் காலை கும்பிடுறேன் தலையை விடுடா. அடே பரமசிவனே தலையை பூருவும் மொட்டை அடிச்சுபூட்டான். காது ஒண்ணையும் அறுத்துவிட்டான்; கழுத்துக்கு மேலே கத்தியை கொண்டுகிட்டுவர்ருனே என்ன கதி நடக்குமோ தெரியவில்லையே, ஐய்யய்யோ அடே பக்கத்துவீட்டுக் காரா காக்சா கழுத்தை அறுக்கப்போருண்டா கொஞ்சம் ஓடியாங்கடா. இன்னும் ஒருவனையும் காணலியே அய்யோ அம்மாடி என்னத்தை பண்ணு

வேண்டி அம்மா! பொன்னு கொஞ்சம் ஓடியாங்கடா. காக்கா! தலையை உடுடா தருமமா போகட்டும்.

பொன்னன் :- ஏண்டா ராமா! அம்பட்டன் கிட்ட தலையை கொடுத்துவிட்டு ஏண்டா கத்துரே.

ராமன் :-ஏண்டா பொன்னு! சாமி கொடுத்த கண்ணுடா தெரியலே. என்னை குனியவைச்சிகிட்டு தலையை பூரூவும் மொட்டை அடிச்துவிட்டான், காதையும் அறுத்துவிட்டான், கழுத்துக்கு மேலே கத்தியும் வைச்சூட்டான் என்னத்தடா பண்ணு வேன்.

பொன்னன் :-ஐயோ! மகனே நான் என்ன மோன்னுபாத்தனே. அடே காக்கா! மரியாதை யாய் ராமனை விடறையா, ஓதைப்பட்டு சாகறையா அடடே இவன் பூரூவும் செவிடன்போலல்ல தெரி யுது; அடே செவிடா! விட்ட உதை போதுமா? இன்னும் வேணுமா.

காக்கா :-அய்யய்யோ! பட்ட உதை போதுங்க நான் ஓடிவிடறங்க.

பொன்னன் :-ஏண்டா ராமா! உனக்கு அறிவு இருக்குதா இல்லையடா போயும் போயும் செவிட னிடத்திலே தலையை கொடுத்துவிட்டு ஏண்டா முழிக்கிறது.

ராமன் :-பொன்னு! இந்த கதையை வெளியில் சொன்னு மானம் போய்விடும். எனக்கு இப்போ தான் அறிவு வந்தது. வாடா வீட்டுக்குப் போகலாம்.

**22.** கனகமகாராஜனும், செல்வமகாராஜனும் திருப்பதி மவுந்துவைப் பார்த்து, புது மந்திரியிடம் மவுந்துவை அழைத்துக்கொண்டு வர உத்திரவு அளிக்கிருர்.

செல்வன் :-பிதா இதோ பார்! யாரோ ஒருவர் யானையின்பேரில் அம்பாரிப் போட்டுக்கொண்டு நம் முடைய வாசற்படியின் அருகே நின்று நம்மை எதிர் பார்க்கிருர். அவர் யாராய் இருக்கலாம்.

க. ராஜன் :-செல்வா! நம்ம மந்திரியிடம் தெரிவித்து அவரை அழைத்துக்கொண்டு வரச் சொல்லும்.

செல்வன் :-பிதா அப்படியே! மந்திரி! அதோ யானையின்பேரில் வந்திருப்பவரை சீக்கிரம் சென்று அழைத்து வா.

மந்திரி :-பிரபு! அப்படியே அழைத்துக்கொண்டு ஓடோடியும் வருகிறேன்.

மவுந்து :-செல்வமகாரர்ஜாவின் மனதில் அந்த ஸ்ரீ வெங்கடாசலபதி சென்று 20-தலைக்கட்டு நாவித மக்களை என்னுடன் அனுப்பிவைக்கும்படி அருள் செய்வது அவர் பாக்கியந்தான்.

மந்திரி :-மகாப் பிரபு! தங்களை மகாராஜா சிம்மாதனத்திற்கு வரச்சொன்னார் புறப்படுங்கள்.

மவுந்து :- அப்பா! அப்படியே வருகிறேன் வாரும் போகலாம்.

செல்வன் :-பிதா! இதோ வருபவர் யாரோ தெரியவில்லையே அவர் யாராயிருக்கலாம்.

கனகன் :-செல்வா! இதோ மந்திரி, அம் மகானை அழைத்துவருகிறான். கொஞ்சம் பொறுமப்பா பார்க்கலாம்.

மந்திரி :-மகானுபாவா! யானையின்பேரில் அம்பாரி போட்டுக்கொண்டு வந்தவர் இவர்தான்.

மவுந்து :-மகாராஜா! நமஸ்காரம். நான் திருப்பதிக் கதிபதியாக இருக்கக்கூடிய மவுந்து. தங்களைக் காணும்படியாகத்தான் வந்தேன்.

க. ராஜன் :-மவுந்து! மிக்க சந்தோஷம், இந்த ஆசனத்தில் அமருங்கள். இந்த ராஜநீதியை நாடி வந்த காரணம் என்ன!

மவுந்து :-மகாராஜா! திருப்பதியில் உள்ள நாவிதர்கள் எல்லோரும் அங்குள்ள வேலைகளைச் செய்

யாமல் கட்டுப்பாடாக நின்று விட்டார்கள். இன்று புரட்டாசி மாதம், நான்காவது வாரம், வரக்கூடிய பிரார்த்தனை மக்களுக்கு மொட்டை அடித்துவிட ஒரு நாவிதனும் இல்லை. தங்கள் நாட்டிற்குள் இருக்கக்கூடிய 20 தலைக்கட்டு நாவிதர்களையும், தங்களிடம் உத்திரவு பெற்று அழைத்துக்கொண்டு போகலாம் என்றுதான் வந்தேன் மகாராஜா.

க. ராஜன் :-மெத்த சந்தோஷம். மவுந்து ! உன் கோரிக்கையின்படி என் நாட்டில் உள்ள 20 தலைக் கட்டு நாவித மக்களையும், தங்களுடன் திருப்பதிக்கு அனுப்பத் தயார். மந்திரி ! நமது நாட்டிற்குள் துரிதமாகச் சென்று அங்குள்ள நாவிதமக்களை அழைத்துக் கொண்டு வருவாய்.

மந்திரி :-மகானுபாவா! தங்கள் கட்டளையின்படி அழைத்துக்கொண்டு வருகிறேன். நமஸ்காரம்.

23. காக்கா நாவிதன், அவன் மனைவி பொம்மியிடம் வந்து சண்டையை வலித்து, பொம்மியிடம் துடப்பத்தால் அடிபடுகிறுன். காதுச் செவிடு நன்ருகிவிடுகிறது.

காக்கா :-அடெ அப்பா. ஓடிவந்த ஓட்டம் பெருமூச்சி வாங்குதடாசாமி. இருந்தாலும் இருக் கட்டும், நடந்த சங்கதியை பொம்மியிடம் சொல்லி விட்டு அவளையும் கூட்டிக்கிட்டு பரதேசியாய், போய்விடரதுதான் மகா உத்தமம். இல்லாவிட்டால், கவுண்டன்மாருங்க கூடிக்கிட்டு நம்மெ அடிச்சு கொண்ணுபூடுவானுங்க, இந்த சங்கதியை பொம்மியிடம் சொல்லிப்பாக்கலாம். அடி பொண்ணே பொம்மி ! காது கேக்கலியா என்னடி பண்ரே.

பொம்மி :-சே, சே, போ, அறிவுக்கெட்ட மனுஷா ! கையிலே விளக்குமாறு இருக்கிறது தெரியும். வாசற்படியை சுத்தப்படுத்தி சுகப்பத்டு தறது தெரியும். எல்லாம் கண்ணுலே பாத்திருந்து, என்னுடிபண்றேண்ணு கேக்றையே.

காக்கா :-ஏண்டி பொம்மி! கட்டினவனே நிக்க வைச்சிக்கிட்டு, வாடான்னும், போடான்னும், செவிடான்னும், குருடான்னும் என்னேக் கேக்கவா உன்னேத் தாலிக் கட்டினேன். உன்னே இப்படி விட்டுவிட்டா எப்பவும் அப்படித்தான் கேப்பே. முன்னே தாலியை அறுத்து வைச்சிபூட்டு, வீட்டை விட்டு போறையா உதைப்பட்டு சாகறையா சொல்ரி.

பொம்மி :-ஏண்டா! செவிடா என்னேயா தாலியை அறுத்துக்கிட்டு ஓதச்சி துரத்தப்போறே, இந்த விளக்குமாத்து அடியைப்பட் டுகிட்டு, வீட்டை விட்டு வெளியே போடா. போதுமா! போதுமா!! போதுமா!!! போதுமா!!!!

காக்கா :-போதுண்டி! போதுண்டி!! போதுண்டி!!! போதுண்டி!!!! போதும். பொம்மி, இன்னியோடே என்னேபுடிச்ச சனியன் தொலேஞ் சாண்டி. நீ அடிச்ச அடியிலே காது நன்னுப் போச்சுடீ! இன்னேயோடே சாந்திகிரகத்தை செய்து கிட்டு சுகமாய் இருக்கலாம் வாடி.

கந்தன் :-பாத்தையடா தாண்டவராயா! ராம கவுண்டனே மொட்டை அடிச்சி காதை அறுத்து விட்டு, பொண்டாட்டிக் கிட்ட வந்துக் கொஞ்சிட்டு இருக்கானே அந்த ராமகவுண்டன், சும்மாவா விடப் போருன்.

தா. ராயன் :-கந்தா! அதிருக்கட்டும், இந்த சங்கதி மகாராஜாவுக்கு தெரிஞ்சிவிட்டா நம்ம கதி ஆண்டவன்தான் பாத்துகிடனும். தெரியுமா.

மந்திரி :-அடெ, நாவிதர்களே, உங்கள் எல்லோ ரையும் பிடித்த பிடியோடே மகாராஜா கொண்டு வரச் சொன்னர். புறப்படுங்கள் போகலாம்.

கந்தன் :-சாமீ, எங்கமேலே ஒண்ணும் தப் பில்லீங்க, இதோ! இருக்காம் பாருங்க காக்கா

இவன்தாங்க ராம கவுண்டனை மொட்டை அடிச்சு காதை அறுத்து விட்டு வந்துட்டாங்க.

மந்திரி :-நாவிதர்களே! எல்லாம் மகாராஜனிடம் வந்து பேசிக்கொள்ளுங்கள் என்னிடம் தெரிவிக்க வேண்டாம் புறப்படுங்கள் போகலாம்.

24. மந்திரி நாவிதர்களை அழைத்துக்கொண்டு வருகிறான். மகாராஜனிடம், சேஞநாவிதன் மனைவியையும் மகளையும் நினைத்து கஷ்டப்படுகிறான்.

சேஞ :-மகாராஜா! என் மனைவி தேவிக்கும், என் குழந்தை நிர்மலாவுக்கும், என் ஏக்கத்தைக் கொண்டு கவலைப்பட்டிருப்பார்கள். அக்கவலையை அவர்களுக்கு தீர்க்கவேண்டுமே மகாராஜா.

க. ராஜன் :-சேஞ! உன்னை மந்திரி அழைத்துக் கொண்டு வந்ததை உன் மனைவியும், உன் மகளும் பார்க்கவில்லையா ?

சேஞ :-மகாராஜா! என் மனைவியும் மகளும் பார்க்கவில்லை.

க. ராஜன் :-சேஞ! கவலைப்படாதே. மந்திரி வந்ததும், அவனிடம் தெரிவித்து உன் மனைவிக்கும் மகளுக்கும் தெரியப்படுத்தும்படி செய்கிறேன்.

மந்திரி :-மகானுபாவா நமஸ்காரம். இதோ நாவித மக்கள் அனைவரும் வந்துவிட்டார்கள்.

நாவிதர்கள் :- மகாராஜா உங்களை கும்பிடுறேனுங்க! உங்கள் சட்டப்படி எல்லாரும் வந்தட்டாங்க, காக்கா இப்படி வந்து நில்லேண்டா.

செல்வன் :-நாவித மக்களே, இதோ திருப்பதியிலிருந்து மவுந்து வந்து இருக்கிறார். நீங்கள் எல்லோரும் அவருடன் சென்று திருப்பதியில் வரக்கூடிய பிரார்த்தனை மக்களுக்கு மொட்டை அடித்துவிட வேண்டுமாம். நீங்கள் என்ன தெரிவிக்கின்றீர்கள்.

கந்தன் :-மகாராஜா! ஒரு சின்ன சங்கதிங்க, திருப்பதியிலே வேலை செய்றவங்க எங்கே போயிட்டாங்க, கொஞ்சம் சொல்லுங்க மகாராஜா.

செல்வன் :-நாவிதர்களே அங்குள்ளவர்கள் எல்லோரும் ஒரேக் கட்டுப்பாடாக நின்றுவிட்டார்களாம். அதைக் கண்டு மவுந்து அதிக விசனமடைந்து உங்களை அழைத்துக்கொண்டு போக வந்திருக்கின்ருர்.

கந்தன் :-மகாராஜா! வேறெ வேலைக்கு போனலும் போவுங்க, அந்த திருப்பதி வேலைக்கு மட்டும் போகமாட்டேங்க மகாராஜா.

செல்வன் :-நாவிதர்களே! ஏன் அங்கே போக மாட்டீர்கள். அதை வெளிடும் கேழ்க்கலாம்.

கந்தன் :-மகாராஜா! நாங்க 20 தலைக்கட்டு பங்காளிகளும் திருப்பதிக்குள்ளே பொன்னை கொடுத்திருக்கேங்க நாங்க மீறிபோனமன்ன எங்களுக்கு சாவு, வாழ்வு சொல்லமாட்டானுங்க அதனலேதாங்க பின்னே ஒண்ணுமில்லேங்க மகாராஜா.

க. ராஜன் :-அடே நாவிதர்களே! செல்வன் சொன்னதைக் கேளாமல் பேசுவதில் பிரயோஜனமில்லை. இப்பொழுதேப் புறப்பட்டு திருப்பதிக்குப் போய்த்தான் தீரவேண்டும்.

கந்தன் :-மகாராஜா எங்களை வெட்டிப் போட்டாக்கூட போகமாட்டோம் மகாராஜா.

க. ராஜன் :-மந்திரி! குழந்தை செல்வன் சொல்வதைக் கேளாமல், என்னை மறுத்துப் பேசக்கூடிய இந்த நாவிதர்கள் எல்லோரையும் பிடித்துக்கொண்டு போய் சிறையில் அடைத்துவிட்டு மற்றக் காரியங்களைச் செய்ய வேண்டும். சீக்கிரம் அழைத்துக் கொண்டு போ.

மந்திரி :-மகானுபாவா! தாங்கள் உத்திரவுப்படி செய்யத் தயார். அடே நாவிதர்களே சீக்கிரம் சிறைக்குள் செல்லுங்கள்.

மவுந்து :-மகாராஜா! இங்குள்ள நாவிதர்களும் தங்கள் வார்த்தையைக் கேளாமல் ஜெயிலுக்குள்ளே சென்றுவிட்டார்கள். திருப்பதியில் நடக்கவேண்டிய வேலைகள் எப்படி மகாராஜா.

க. ராஜன் :-மவுந்து! நாங்கள் என்ன செய்வது அந்த ஏழுமலையில் இருக்கக்கூடிய ஸ்ரீ வெங்கடாசலபதி அருள் இருந்தால் கட்டாயம் நடக்கும். கவலைப் படாதே மவுந்து.

சேனு :-மகாராஜா! ஓர் விண்ணப்பம். திருப்பதியில் வரக்கூடிய பிரார்த்தனை மக்களுக்கு அடியேன் ஆனந்தமாக ஓர் குறைவும் இல்லாமல் மொட்டை அடித்துவிடுகிறேன். எனக்கு உத்திரவுக் கொடுக்க வேண்டும் மகாராஜா.

க. ராஜன் :-மவுந்து! சேனு சொல்வதை கவனித்தீரா? இல்லையா!

மவுந்து :-மகாராஜா! கவனித்தேன். திருப்பதியில் வரக்கூடிய லக்ஷக்கணக்கான மக்களுக்கு இந்த ஒரு அம்மட்டன் வந்து என்ன செய்யமுடியும்.

செல்வன் :-சேனு! மவுந்து சொல்வதைப் பார்த்தால் உன்னால் ஒருபோதும் முடியாது. முடியாத காரியத்திற்கு ஏன் முன் போகவேண்டும்.

சேனு :-மகாராஜா! ஏன் முடியாது? அந்த ஸ்ரீ பாண்டுரங்கன் அருள் உள்ளமட்டும் கட்டாயம் முடித்தே தீருவேன். இம்முறை பாருங்கள்.

க. ராஜன் :-மவுந்து! சேனு நாவிதன் வார்த்தைக்கு மறுதளிக்கவேண்டாம். திருப்பதிக்கு அழைத்துச் செல்லுங்கள். வேலையைப் பூர்த்தி செய்வான்.

மவுந்து :-மகாராஜா! தங்கள் வாக்கியத்தின்படி நடக்கத் தயார். சேனு! புறப்படும் போகலாம். மகாராஜா! இளவரசே! நமஸ்கரிக்கின்றேன். நாங்கள் சென்றுவருகிறோம்.

செல்வன் :-அப்பா சேனு! சனிவாரம் எண்ணை நீராடுவதற்குள்ளாக வந்துவிடுவாயா? அல்லது திருப்பதிலேயே நின்றுவிடுவாயா? சொல்லும் சேனு.

சேனு :-மகாராஜா! அங்குள்ள வேலைகளை எல்லாம் ஒரு விநாடிக்குள் முடித்து, கட்டாயம் சனிவாரம் வந்துவிடுவேன் மகாராஜா.

மவுந்து :-சேனு! சீக்கிரம் யானையின்பேரில் ஏறிக் கொள் போகலாம்.

சேனு :- சுவாமி! ஏறிக்கொண்டேன் யானைப் போகட்டும் என்று யானையில் ஏறிக்கொண்டு திருப் பதி வருகிறார்.

25. ஜெயிலுக்குள்ளே நாவிதர்களும், பழைய மந்திரியும் ஒன்றுகூடி ராஜனை தூஷிக்கிறார்கள். பாண்டரெங்கன், செல்வ மகாராஜனைப்போல் உருமாறி அவர்களை வீர ஜாட்டியால் அடிக்கிறார்.

ப. மந்திரி :- அடே. நாவிதர்களே! அரசன் உங்களை எதற்காக சிறைக்குள் அடைத்தான். நீங்கள் செய்த குற்றமென்ன? சொல்லுங்கள்.

தா. ராயன் :- சாமீ! எங்க கதியை அப்புறம் சொல்றங்க. எங்களுக்குமுன்னே நீங்க எதுக்காக ஜெயிலுக்குள்ளே வந்திருக்கீங்க? அதைச் சொல் லுங்க.

மந்திரி :-நாவிதர்களே! என்னை வீண்பழி சுமத்தி கனகமகாராஜன் இச்சிறையில் வைத்து இருக்கின் ருன். உங்கள் விஷயமென்ன.

தா. ராயன் :-சாமீ! எங்களையம் அப்படிதாங்க வீண்வம்பை வளர்த்து சிறையிலே போட்டிருக்காங்க அந்த அறிவில்லாத ராஜனை என்ன செய்தா தீருங்க.

மாய செல்வன் :-அடே. நாவிதர்களே! என்ன தெரிவித்தீர்கள்? இந்த வீரஜாட்டியின் அடியைப் பட்டு உயிர்விடுங்கள் சண்டாளர்களே.

நாவிதர்கள் :-மகாராஜா! நாங்க தெரியாமெ சொல்லிட்டங்க மகாராஜா. எங்களை அடிச்சமட்டும் போறும் மகாராஜா, விட்டுவிடுங்க மகாராஜா. ஐய் யய்யோ! அம்மாடி! எங்க உயிர் போகுதே, என்ன செய்வேண்டி பெத்தவளே.

மாய செல்வன் :-ஏ! மந்திரி! நீயும் அவர்க ளுடனே சேர்ந்து ராஜன் என்றும் மதியாமல் தூஷித் தாயல்லவா? நீயும் இந்த ஜாட்டியால் அடிபட்டு உயிர்விடும் துரோகி.

ப. மந்திரி :-மகாராஜா ! என் பிராணன் என்னை விட்டுப் பிரிகிறது. அடித்தமட்டும் போதும் மகா ராஜா.

மாய செல்வன் :- மந்திரி ! உனக்கும் இரக்க மில்லை ! இந்த நாவிதர்களுக்கும் இரக்கமில்லை இதோ! வீர ஜாட்டியால் அடிக்கின்றேன் பார்.

எல்லோரும் :-ஆஹா ! பாமுந் தெய்வமே ! எங்க பிராணம் எங்களைவிட்டுப் பிரிகிறது. நீயே எங்களைக் கார்த்து ரக்ஷிப்பாய். (என்று எல்லோரும் கீழே விழுகிருர்கள், சுவாமி மறைந்துவிடுகிருர்)

26. திருப்பதியில் பட்டாச்சாரியார் மவுந்துவைவும் நாவி தர்களையும் எதிர்பார்க்கிருர். மவுந்து சேனுவைக் கொண்டு இறக்குகிருர்.

பட்டாச்சாரி :-என்னையா மணியம் ! ஆச்சரிய மாக இருக்கிறதே. இந்த வருடம் ஏராளமான பிரார்த்தனைமக்கள் வந்து இருக்கிருர்கள். மவுந்து செல்வமகாராஜனிடம் போனவர் நாவிதர்களை அழைத்துக்கொண்டு இன்னும் வரவில்லையே. என்ன செய்வது.

மணியம் :-சுவாமி! இப்படித் திரும்பி பாருங்கள். மவுந்துவும், இன்னும் ஒருவனும் யானையைவிட்டு கீழே இறங்குகிருர்கள். போய் சமாச்சாரத்தைக் கேளுங்கள் சாமி.

பட்டாச்சாரி :-மணியம் ! நான் கவனிக்கவில்லை. வாரும் அவ்விடம் போகலாம்.

மவுந்து :-அப்பா சேனு ! இதோ வந்திருக்கக் கூடிய ஜனங்களை உன் கண்ணால் பார்த்தாயா.

சேனு :-சுவாமி ! பார்த்தேன். அக்கவலைத் தங்க ளுக்கு வேண்டாம் சுவாமி.

பட்டாச்சாரி :-என்னுங்க மவுந்து ! செல்வமகா ராஜன் அங்கே இருக்கக்கூடிய நாவிதர்களை உங்க ளுடன் அனுப்பவில்லையா ? என்ன சங்கதி.

மவுந்து :-பட்டாச்சாரியாரே! செல்வமகாராஜன் ரொம்பவும் நல்லவர். அங்குள்ள நாவிதர்கள் எல்லோரும் கெட்டவர். அவர்கள் திருப்பதி வேலைக்கு வரமுடியாது என்று ஒருவருக்கொருவர் தீர்மானித்து நின்றுவிட்டார்கள் நான் என்ன செய்வது.

பட்டாச்சாரி :-அட நாராயணு! நாம் எல்லோரும் இந்த திருப்பதியை விட்டு எங்கேயாவது ஓடித்தான் போகவேண்டும். வந்திருக்கும் ஜனங்களுக்கு என்ன பதில் சொல்வது.

சேனு :-சுவாமி! இந்த லக்ஷங்கோடி ஜனங்களுக்கும் குறைவில்லாமல் வேலையைச் செய்து, நான் பதில் சொல்லுகிறேன். நீங்கள் அவரவர்கள் மற்ற வேலையை பாருங்கள் சுவாமி.

பட்டாச்சாரி :-ஏண்டா அம்மட்டன் மகனே! ரொம்ப சாமர்த்தியமுடையவன்போல் தெரிகிறதே. ஆனாலும் உன் கெட்டிக்காரத்தனத்தை இன்றைக்குப் பார்த்துவிடுவதே சரி. மவுந்து வாருங்கள் தேவஸ்தானத்தின் வேலைகளைக் கவனிக்கலாம்.

ஜனங்கள் :-பார்த்தீரய்யா! அமிர்தலிங்கம். இந்த ஒரு அம்மட்டனை வேலையைச் செய்யச் சொல்லி விட்டு காரியதரிசிகள் அவங்க அவங்க போய்விட்டாங்க. இந்த அம்மட்டங்கிட்ட தலையை கொடுத்தம்பண்ணு இவன் காதறுப்பானே, மூக்கை அறுப்பானே தெரியவில்லே. நீங்க எல்லோருமா என்னையா சொல்றீங்க, சொல்லுங்க. மொட்டை அடிச்சிகிடலாம்.

மற்றவன் :-அடே அப்பா! தீபாவளி! நான் இப்பொதான் கலியாணத்தைப் பண்ணிக்கிட்டு அறியாதவளை அழைச்சிகிட்டு வந்திருக்கேன். இந்த அம்மட்டங்கிட்டே குந்தி மொட்டை அடிச்சிக்கமாட்டேண்டாப்பா.

இன்னொருவன் :-நீங்க யாரும் மொட்டை அடிச்சிக்காம போனு போவுது. எல்லாருமா ஒத்திபோங்

கய்யா! அடே அப்பா நாவிதா! எனக்கும் என் பெண்டாட்டி பிள்ளைக்கும் காதி அடைச்சிக்கிட்டு போவுது மொட்டை அடிச்சி விட்டப்பா.

சேனு :-சுவாமி! இதோ இப்படி உட்காருங்கள் மொட்டையை பரிசுத்தமாக அடித்துவிடுகிறேன். (என்று மொட்டை அடித்துவருகிருன்.)

27. பாண்டுரெங்கன் திருப்பதியில் உள்ள நாவிதனைப்போல் உரு மாறிப் பக்கத்தறையில் வந்து உட்கார்ந்து சேனுவின் அடப்பத்தில் கத்தியும் கல்லையும் தெரியாமல் எடுத்துக் கத்தியைத் தீட்டுகிருர். அதைப் பார்த்து ஜனங்கள் ஓடிவருகிருர்கள்.

ஜனங்கள் :-யாரய்யா நீங்க! இப்படித் திரும்பி பாருங்க. இந்த திருப்பதியிலே பழக்கமாக மொட்டை அடிக்கக்கூடிய அம்பட்டன் வந்து கத்தியை தீட்டுகிருன் எல்லாரும் வாங்கய்யா மொட்டையை அடிச்சிகிடலாம்.

மற்றவர்கள் :-ஆமாய்யா, ஆமாம். ஆதிகாலத்து அம்பட்டன் அறையிலே வந்து இருக்கான். எல்லாருமா வ்ாங்கய்யா மொட்டை அடிச்சுகிடலாம்.

மாய நாவிதன் :-யாரய்யா நீங்க! ஒவ்வொருவராக வாருங்கள்.

மற்றவர்கள் :-அடே அப்பா! நாவிதா! எங்களுக்கு மொட்டையை அடிச்சுவிடு உனக்கு தனியாக வெகுமானத்தை கொடுத்துவிட்டு போறம்டா.

மாய நாவிதன் :-சந்தோஷங்க! அப்படியே எல்லாருமா வரிசை வரிசையாகக் குந்துங்க.

ஜனங்கள் :-என்னய்யா! இப்படி ஆளோடே ஆளாமேலே விழுறிங்க். உங்களுக்கு அறிவு இருக்கிறதா இல்லையா? இப்படி மொட்டை அடிச்சிக்கிட்டு கோவிலுக்குப் போகாப்போனு யாரய்யா அடிச்சான். வரிசையாய் குந்துங்க.

மற்றவன் :-ஏண்டா அறிவு கெட்டவனே! காலையிலிருந்து கஞ்சி இல்லாம காதை அடைச்சிகிட்டு

போறது, அந்த ஏழுமலையானுக்குத்தான் தெரியும். உனக்கென்னத் தெரியும். வாயை மூடிக்கிட்டுப் பேசாம இருய்யா. அடே அம்மட்ட மகனே! சீக்கிரமா மொட்டை அடிச்சிவிட்ரா. என்று குடிகள் சுவாமியை கஷ்டப்படுத்துகிறார்கள்.

28. திருப்பதியில் இருக்கக்கூடிய பூர்வீக அம்மட்டர்கள் சத்திரத்தில் மொட்டை அடிக்கும் சேனுநாவிதனைப் பார்த்து அவனைக் கொன்றுவிட ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு ஏரிக்கரைக்கு வருகிறார்கள்.

நாகரத்தினம்:-ஏண்டாப்பா! ராமசாமி நம்ம ஜாதியான் வந்து, சத்திரத்திலே குந்திக்கிட்டு கொஞ்சமும் அச்சமில்லாமல், வந்த ஜனத்திற்கு மொட்டை அடிச்சிவிடுறானே. அவனுக்கு என்ன தைரியம்டா. அவனை ஒரு கை பார்த்துவிடுவதே சரி.

ராமசாமி:- ஏண்டா! நம்ப நூறுபேருமா இப்பவே ஏரிக்கரையில் இருக்கக்கூடிய பனைமரத்து சாலையிலே பதுங்கி இருந்தா அவன் வேலையை செய்துவிட்டு இந்த வழியாய் வருவான்; அந்த சமயத்தில் அவனை ஒரு கை பார்த்துடனும்.

ஜனங்கள் :- ஏழுமலையானுக்கு கோவிந்தா! கோவிந்தா! வெங்கடேச பெருமாளுக்கு கோவிந்தா! கோவிந்தா!! அலுமேலு மங்கம்மாவுக்கு கோவிந்தா! கோவிந்தா.

நாகரத்தினம் :-இப்படி பாருங்கடா, லக்ஷ கணக்கான ஜனங்கள் மொட்டையை அடிச்சிக்கிட்டு கோவிந்தம் போட்டுகிட்டுபோகிற ஓசையை கேட்டிங்களா! சீக்கிரமா வாங்கடா பனைமரத்தின் சாலைக்குப் போய் பதுங்கி இருக்கலாம்.

29. பாண்டுரெங்கன் வந்தஜனங்களுக்கு மொட்டை அடித்து விட்டு மறைகிறார். சேனுநாவிதன் அடப்பத்தில் கத்தியும் கல்லையும் இல்லை என்று பக்கத்தறையில் வந்து பார்க்கிறான்.

சேனு :- என்ன ஆச்சரியம்! அந்த குழந்தை குட்டிக்காரர்களுக்கு வேலையைச் செய்தவுடன், லக்ஷ

கணக்கான ஜனங்கள் ஒருவரையும் காணவில்லையே. இந்த அட்டப்பத்தில் இருந்த கத்தியும் கல்லையும் காண வில்லையே. எல்லாம் அந்த ஸ்ரீ பாண்டுரங்கன் அருள் தான். அந்த அறைக்குச் சென்றுப் பார்க்கலாம். ஆஹா இது என்ன ஆச்சர்யம். வந்த பிரார்த்தனை மக்கள் தலைமுடிகள் கோபுரம்போல் குமிந்துக்கிடக் கிறது. நாம் வைத்திருந்த கத்தியும் கல்லும் இங்கே கிடக்கிறது. என்ன மாயமோ தெரியவில்லை. ஓ! பாண்டுரங்கா இது உன்னுடைய மகிமையோ அல் லது இது யாருடைய மாயமோ! பாண்டுரங்கா! பக்தவத்ஸலா! என்று சேனு வருத்தப்பட்டுக் கொண்டு இருக்கிறான்.

30. மவுந்துவும், பட்டாச்சாரியாரும் மொட்டை அடித்து கோவிந்தம் போட்டுவரும் ஜனங்களைக் கண்டு சந்தோ ஷப்பட்டு சேனுவைப் பார்க்க வருகிறார்கள்.

மவுந்து :-ஐயா! பட்டாச்சாரியார். ஜனங்கள் மொட்டை அடித்து கோவிந்தம் போட்டுவரும் வேடிக்கையைப் பார்த்தீரா ஐயா.

பட்டாச்சாரி :-என்னங்க நீங்க அழைத்துக் கொண்டு வந்த அம்மட்டன் மகன், மகா கெட்டிக் காரன் போலல்லவா தெரிகிறது. அடே அப்பா! இவ்வளவு ஜனத்திற்கும் அந்த ஒரு அம்மட்டன் எப்படி வேலையைச் செய்திருப்பான் என்று எனக்கு நம்பிக்கைப்படவில்லை. வாருங்கள் சத்திரம் போய் சேனுவைப் பார்த்துவிட்டு வரலாம்.

மவுந்து :-பட்டாச்சாரியார் அதுவும் நல்லதுதான் புறப்படுங்கள் போகலாம்.

சேனு :-ஸ்ரீ பாண்டுரங்கன் அருளால் என் கோரிக்கை நிறைவேறிவிட்டது. இன்று சனிவாரம் நமது மகாராஜனுக்கு எண்ணை நீராட்டம் செய்து வைக்கும் நாள் நான் இன்றுக் கட்டாயம் போக வேண்டும். இன்னும் மவுந்துவைக் காணவில்லையே.

மவுந்து :-சேனு ! இதோ வந்துவிட்டேன். என்னப்பா வருத்தப்பட்டு இருக்கே.

சேனு :-சுவாமி ! ஒன்றுமில்லை. நான் செய்ய வேண்டிய வேலைகள் எல்லாம் பூர்த்தியாய்விட்டது. நான் மகாராஜாவிடம் போக உத்திரவு வேண்டும் சாமி.

மவுந்து :-சேனு! ஒரு விஷயம். திருப்பதிக்கு வந்த பிரார்த்தனை மக்களுக்கு குறைவுபடாமல் வேலையைச் செய்ததால், இதோ உனக்கு ரூபாய் ஆயிரம் பெறக் கூடிய முத்துமாலையை வெகுமதி தந்தேன். இதைப் பெற்றுக்கொண்டு சந்தோஷமாக மகாராஜாவின் வேலையைப் போய்பாரும் சேனு.

சேனு :-"சுவாமி ! அடியேன் அநேக வந்தனம். நான் போய் வருகிறேன் சாமி" என்று ஏரியின் பனைமரத்தின் சாலை வழியே வருகிறுன்.

31. செம்படவன் நாகன், அவன் மனைவி தூங்கிக்கொண்டு இருப்பதைப் பார்த்து திட்டி எழுப்பிவிட்டு, வலையை எடுத்துக்கொண்டு, ஏரிக்குள் மீன் பிடிக்க வருகிறுன்.

நாகன் :-ஏண்டி பொன்னி ! பொளுது விடிஞ்சி எவ்வளவு நேரமாச்சு உன் பாட்டுக்கு பெருமூச்சியை விட்டு தூங்கிக்கிட்டு இருக்கையே நான் எப்போதான் வலையை எடுத்துகிட்டு, ஏரிக்குள் போய் தொலையறது சீக்கிரமா, எளுந்திர்ரீ நான் போய்வாரேன்.

பொன்னி :-அட நாராயணு நான் என்னத்தைப் பண்ணுவேன், ஏய்யா படுத்துகிட்டு இருந்தவளை எளுப்பி தொலைச்சிங்களே, நான் படுத்திருக்கிற கஷ்டம் உனக்குத் தெரியுமா ?

நாகன் :-ஏண்டி பொன்னி ! என்னடி அப்பேர் கொத்த கஷ்டம் சொல்றீ.

பொன்னி :-நாலைஞ்சி நாளா கள்ளுத்தண்ணி இல்லாத கஷ்டந்தான், தெரியாதா ?

நாகன்:-பொன்னி! தெரிஞ்சிகிட்டேன். கொஞ்ச நாழி அப்படியே படுத்துகிட்டு இரு. நான் போய்

மீனை பிடிச்சிகிட்டு வந்து அதை விற்று தொலேச்சி கள்ளுத் தண்ணியை வாங்கித் தர்ரேண்டி.

பொன்னி :-அப்படின்னு இங்கே நிக்காமே போய் தொலேங்க.

32. ஏரிக்கரைக்கு வந்த திருப்பதி அம்மட்டர்கள், சேனு நாவிதன் ஏரி வழியாக வருகிறபோது சேனுவை அடித்து ஏரிக்குள்ளே கைக்கால்களைக் கட்டிப்போட்டு விடுகிறார்கள்.

நாகரத்தினம் :-ராமசாமி! அதோ வருகிறவன் நம்ப ஜாதியானு அந்நிய மனுஷனு, கொஞ்சம் பாருங் கடா.

ராமசாமி :-ஆமாண்டா! ஆமாம். நம்பளவந் தாண்டா! இந்த வழியாய் வர்ருன். எல்லாருமா வாயை மூடிக்கிட்டு பேசாம இருங்கடா.

சேனு :-ஸ்ரீ பாண்டுரங்கா, பரமானந்தா இன்று மகாராஜாவுக்கு எண்ணேத் தேய்க்கும் முறை, கொஞ்சம் நாழியாகிவிட்டது, நான் வரவில்லே என்று மகாராஜா என்ன கோபிப்பாரோ தெரியவில்லே. அந்த மகாராஜனுக்கு மனமிரக்கத்தைக் கொடுத்து வைப்பது உன் கடமை பாண்டுரங்கா.

ராமசாமி :-எங்கடா இருக்கிருன் பாண்டுரங்கன். கம்மினுட்டி மகனே. விட்ட ஒதையைப்பட்டு கீழே விழுந்து சாகுடா.

சேனு :-ஹா பாண்டுரங்கா! என்னே நீயே ரக்ஷிக்க வேண்டும்.

ராமசாமி :-அடே ரத்தினம்! ஒரே அடியிலே கீழே விழுந்துட்டான் அவன் கையில் இருக்கும் மூட்டையை பிடுங்குங்கடா.

நாகரத்தினம் :-போடா பைத்தியக்காரா! நான் கையும் காலேயும் கட்டரேன் அந்த மூட்டையைப் பிடுங்கி அதுலே என்ன இருக்குதுன்னு பாருங்கடா.

சேனு :-அப்பா! என்னே அடித்தமட்டும் போதும், கைகால்களேக் கட்டாமல் விட்டுவிடுங்க

ளப்பா. உங்களை அந்த பாண்டுரங்கன் காப்பாற்று வார்.

ராமசாமி:-ஏண்டா! உன்னைவிட்டு விடவா, இவ்வளவு கஷ்டப்பட்டோம். மூட்டையை விட றையா ஓதையைப்படறையா சொல்ரு.

சேனு:-அப்பா! இதோ மூட்டையைக் கொடுத்து விட்டேன் என்னைக் கட்டி இருக்கக்கூடிய கட்டுகளை அவிழ்த்துவிடுங்களப்பா.

ராமசாமி:-ஏண்டா கம்மினுட்டி, கட்டின கட்டை அவிழ்த்துவிடவா? என் மகனே. இப்பொ விட்ட ஓதை எப்படி இருக்குதுன்னு பார்ரு.

நாகரத்தினம்:-ராமசாமி! நீ அடிச்ச அடியிலே பேச்சுமூச்சு இல்லாமெ பூட்டாண்டா. இவனை மூலைக்கு ஒருத்தனுப் பிடிங்கடா. ஏரியிலே தூக்கிப் போட்டுவிடலாம்.

ராமசாமி:-அடே நாகரத்தினம் எல்லாரும் புடிச்சிகிட்டோம் தூக்கி அடிங்கடா பார்க்கலாம்.

நாகரத்தினம்:-கம்மினுட்டி மகன் தொலைஞ் சான். வாங்கடா வீட்டுக்குப் போகலாம்.

சேனு:-ஓ பாண்டுரங்கா! என்னை அநியாயமாக அடித்து என் கைகால்களைக் கட்டி ஏரிக்குள்ளே போட்டுவிட்டு, வீட்டுக்குப் போகக்கூடிய படுபாவி கள் எல்லோரும், கல்லாக நிற்கவேண்டும் பாண்டு ரங்கா! என்று சேனு தண்ணீரில் பரதவிக்கிருன்.

33. சேனு சாபத்தால் திருப்பதி அம்மட்டர்கள் கல்லாக நின்று விடுகிருர்கள். அவ்வேளை செம்படநாகன் ஏரிக்கு வருகிறபோது கல் சிலைகளைப் பார்த்து, பிரார்த்தனைச் செய்கிருன்.

நாகன்:-இன்னிக்கி, ஏரிக்குள்ளே இருக்கிற மீனை ஒன்றுவிடாமெ பிடிச்சி விற்பனைச் செய்து நானும் என் பெண்டாட்டியுமா கள்ளுத் தண்ணியைக் குடிக் காவிட்டா, என் பேரு நாகனல்லா பாத்துக்கோ. அப்பா கடவுளே; பயந்துவிட்டேன் கடவுளே;

நேற்று இங்கே வந்தேன் கடவுளே; நீங்க யாருமில்லே கடவுளே; இன்னிக்கு வந்தே கடவுளே; நீங்க எல்லாரும் இருக்கிறீங்க கடவுளே; அப்பா ஐனுரப்பன் கடவுளே; சாமி காத்தவராயன் கடவுளே; ஐயா, முத்து வீரன் கடவுளே; எங்க முனியாண்டி கடவுளே; நீங்க எல்லாருமா கடவுளே; இங்கே வந்தீட்டிங்க கடவுளே; உங்களே வேண்டிக்கிட்டு கடவுளே; தண்ணிமேலே வலையைப் போடறேன் கடவுளே; ரொம்ப மீனுஆப்ட்டா கடவுளே; கள்ளு வாங்கி படைச்சி பூட்றேன் கடவுளே; நான் போய் வர்றேன் கடவுளே; என்னே கைவிடாதே கடவுளே; உங்களேத்தான் நம்பி போறேன் கடவுளே.

சேனு :-ஏ பாண்டுரங்கா! என்னே இக்கதிக்காளாக்கி வேடிக்கைப் பார்ப்பது நீதியா. பக்தவத்ஸலா, என்னேக் கார்த்து ரக்ஷிப்பாய்

நாகன் :-என்னடா இது சனியனுப் போச்சு. தண்ணிக்குள்ளற வலையைப் போடப்பாத்து, ஒரு மனுஷன் தண்ணிக்குமேலே தெப்பக்கட்டைப்போல மிதக்கிக்கிட்டு பாண்டுரங்களே வேண்டருனே. அய்யோ பாவம், நாம் தண்ணியில் நீந்திக்கொண்டு போய் அந்த மனுஷனே எடுத்துக்கிட்டு வந்து கரையிலே விடலாம்.

சேனு :-பாண்டுரங்கா! பரமானந்தா! பாண்டுரங்கா! பரமானந்தா.

நாகன் :-ஐயோ! பாவம். இந்த மனுஷன் அந்த பாண்டுரங்கன்மேலேயே உயிரை விட்ருனே. அய்யா வாயை மூடிக்கிட்டு பேசாமெ வாங்க.

சேனு :-சுவாமி! எல்லாம் அந்த ஸ்ரீ பாண்டுரங்கன் அருள்தான். உன்னே அந்த பாண்டுரங்கன் கார்த்து ரக்ஷிப்பார் சாமி.

நாகன் :- அய்யோ கடவுளே! மெய்தானுங்க கடவுளே! அப்படியானு கடவுளே! உன்னேக் கொண்டுவிட்டேன் கடவுளே! கயிற்றை அவுத்து விட்டேன் கடவுளே. என்னுங்க உன்னே யாருங்க

இந்தக் கதியாச் செய்தது. சொல்லிக்கிட்டு வாங் கய்யா.

சேனு :-சுவாமி! என்னை இக்கதியாச் செய்தவர் கள் அதோ கல்லாக நிற்கக்கூடியவர்கள்தான் வந்து பாருங்கள்.

நாகன் :-அய்யோ கடவுளே! நீங்க சொல்றது எனக்கு நம்பிக்கை இல்லெ கடவுளே! என்னுங்க கல்லாய் இருக்கிறவங்களை நல்லா ஆக்கினுல், உங்க பொய்யும் மெய்யும் கண்டறிவேன் கடவுளே.

சேனு :-சுவாமி! கல்லா இருப்பவரை நன்ருய் செய்துவிட. என்னுல் எப்படி முடியும். எல்லாம் அந்த பாண்டுரங்கன் அருளால் ஆகவேண்டும்.

நாகன் :-அப்படியானு கடவுளே! அந்த பாண்டு ரங்கன் கடவுளே! கொஞ்சம் கூப்பிடுங்க கடவுளே! என்னுங்க உங்க பாண்டுரங்கங்கிட்ட சொல்லி, கல்லா இருக்கிறவங்களை கொஞ்சம் நல்லாக்கச் சொல்லுங்க கடவுளே.

சேனு :-சுவாமி! அப்படியே. ஏ பாண்டுரங்கா! பரமானந்தா! இதோ கல்லாக நிற்கக்கூடிய ஏழை மக்கள் அறியாமல் செய்தக் குற்றத்தை மன்னித்து, உயிர் கொடுத்து என் வார்த்தையை இன்னவருக்கு நிஜப்படுத்தவேண்டும் பாண்டுரங்கா.

நாகரத்தினம் முதலியவர்கள் எழுந்திருத்தல் :- சாமி! நீங்கதான் எங்களுக்கு கண்கண்ட தெய்வம். நாங்க உன் மகிமையை அறியாம செய்தக் குற்றத்தை அங்கரிச்சி எங்களை ஆதரிக்கவேண்டும் சாமி.

நாகன் :-ஏண்டா அறிவுக்கெட்ட அம்மட்ட பசங் களே நீங்க எல்லாருமா கூடிக்கிட்டு இந்த மனுஷனை கையுங் காலையும் கட்டி தண்ணிலே போட்டுட்டிங் களே. நான் ஒரு மனுஷன் இல்லாவிட்டா, இந்த மனுஷன் கதி என்ன ஆகிறது? சொல்லுங்கடா.

நாகரத்தினம் :-சுவாமி! நீங்களும் எங்களை மன் னிக்கனும் சாமி.

சேனு :- உண்மைதான். இவர்கள் தெரியாம செய்தக் குற்றத்தை நீங்கள் மன்னித்துதான் தீர வேண்டும்.

நாகன் :-அப்படியா சங்கதி, சரி சரி எப்படியா வது போங்க. நான் வலையைப் போட்டு நாலு கண்டை குஞ்சிகளை பிடிச்சிக்கிட்டு வீட்டுக்கு போறேனய்யா, நான் போகட்டுங்களா.

சேனு :-சுவாமி! நில்லுங்கள். மாண்டுபோகிற என்னை மீட்டுக்கொண்டு வந்தவர் நீரல்லவா, இன் றோடு மீனைப்பிடித்து உயிர்வதைச் செய்வதை விட்டு, இதோ திருப்பதியில் வந்த வெகுமானம், முத்து மாலையை உனக்கு தந்தேன். இதைக்கொண்டு விற் பனைச் செய்து, குடும்பவிருத்தி அடையவேண்டும்படி இந்த அடியேன் கொள்கை இதைப் பெற்றுக்கொள் ளுங்கள் சுவாமி.

நாகன் :-ரொம்ப சந்தோஷமா போச்சுங்க. நீங்க சொன்னமாதிரியா மீனைப்பிடித்து உயிர்வதை செய் றதை விட்டுவிடரங்க. வலையைக்கொண்டு போய் அடுப்பிலே வச்சி கொளுத்திடுரங்க. நானும், எம் பெண்டாட்டியும் புளிச்சக் கள்ளைக் குடிக்கிறதையும் விட்டுவிடறங்க. ரொம்ப நமஸ்காரங்க, நான் போய் வர்றேங்க.

சேனு :- சுவாமி! நமஸ்காரம். சந்தோஷமாக போய்வாருங்கள். நானும் செல்வரங்கபுரம் போய்ச் சேருகிறேன். பாண்டுரங்கா நீயே துணை.

ரத்தினம் :-சாமி! நாங்கள் எல்லோரும் தங்க ளுடனே வந்து உங்களை வீட்டுமட்டும் கொண்டுவிட்டு விட்டு போகிறோம் சாமி.

சேனு :-"அப்படியானால் வாருங்கள் போகலாம்" என்று செல்வரங்கப்பட்டிணம் வருகிறார்கள்.

**34.** மீன் பிடிக்கவந்த நாகன் வரவில்லை என்று நாகன் மனைவியும், மகனும் கஷ்டப்படுகிறார்கள். நாகன் முத்துமாலையை எடுத்துக்கொண்டு வீடு வருகிறான்.

பொன்னி :- அடே அப்பா! நாலேஞ்சி நாளா உடம்பு ஒண்ணும் சரிப்படல்லே. அடே பெரிய பைய்யா! பல்லே துலக்க கொஞ்சம் தண்ணி கொண்டாடா.

பிள்ளை :- எம்மா! எனக்கு கஞ்சி இல்லாம காதை அடைச்சிக்கிட்டு போகுது. மணி என்னு ஆச்சு, இப்பவா பல்லே விளக்கப்போறே.

பொன்னி :-ஆமாண்டா ஆமாம். கலேயத்திலே தண்ணியை மொண்டு வாடா.

பிள்ளை :-அட நாருயணு! என்னே ஏண்டா இந்த பாவி வயத்திலே பிண்டம் பிடிச்சிப்போட்டே. இந்த பிண்டத்தை கத்தி எடுத்து கண்டம் கண்டமா வெட்டிக்காப்பூட்டா நான் ஒரு ஆம்பிள்ளேயா பார்த்துக்க.

நாகன் :-ஐய்யய்யோ! நான் என்னத்தை பண்ணுவேன். அடே பெரி பைய்யா! கதையைச் சொல்றேன் கத்தியை விடுடா.

பிள்ளை :-எப்பா! நீயுமாச்சு, எங்கம்மாளுமாச்சு கத்தியை விடப்பா வெட்டிக்கிட்டு சாவுறேன். விடறையா என்ன சொல்றே.

நாகன் :-பெரிய பைய்யா! இந்தமுறை மன்னிச்சி விட்ரு. ஏண்டா மகனே! நீ நாளேஞ்சி நாளா முணரிகிட்டு இருக்கிறது எனக்குத் தெரியுமடா. இன்னேயிலேயிருந்து நானும், உன்னேப் பெற்றவளும் அந்த கள்ளுதண்ணியைக் குடிக்காமெ, கடவுளே வேண்டிக்கிட்டு குடுத்தனத்தைப் பாக்ருேம். கத்தியை விட்ரு.

பிள்ளை :-எப்பா! அப்படின்னு இதோ கத்தியை போட்டுட்டேன். எங்கம்மாளும் நீயுமா, இப்போ சொன்னதுபோல அந்த நாராயணன்மேலே சத்தியத்தைப் பண்ணுங்க பாக்கலாம்.

நாகன் :-"அடெ என் மகனே! அப்படியே செய்ரம்டா. ஏண்டி பொன்னி பாக்கரே, கிட்ட வந்து

நில்ரீ. நாராயணு, கோவிந்தா, நானும் என் பெண்டாட்டியுமா இன்னியிலேயிருந்து அந்த மது பானத்தை விட்டு என் மகனுக்கு கலியாணத்தை செய்து வைக்கிரேண்டா கோவிந்தா. பொன்னி இன்னையோடே நம்பளை புடிச்ச சனியன் தொலைஞ் சாண்டி. இந்த முத்துமாலையைப் புடிச்சிக்கோடீ, பெரிய பைய்யா! சஞ்சலத்தைவிட்டுத் தொலையடா'' என்று நாகன் குடுத்தனத்தை நடத்தி வருகிருன்.

35. சேஞவும், கூட வந்த திருப்பதி நாவிதர்களும் சேஞ வின் வீட்டு திண்ணையில் உட்கார்ந்து பேசுகிருர்கள். தேவியும், நிர்மலாவும் வந்து சேஞ வீட்டிற்குள் அழைத்துக்கொண்டுப் போகிருர்கள்.

சேஞ :-ஐயா! இதுதான் என் வீடு. திண்ணையில் உட்காருங்கள்.

ரத்தினம் :-சாமி! உங்களைக் கொண்டுகிட்டு வந்து தங்கள் இல்லத்திலே சேத்துவிட்டங்க. நாங்க திருப்பதிக்குப் போக உத்திரவு கொடுங்க.

சேஞ :-மெத்த சந்தோஷம் நீங்கள் எல்லோரும் திருப்பதியில் இருக்கக்கூடிய ஸ்ரீ வெங்கடாசலபதி யிடம் வரக்கூடிய பிரார்த்தனை மக்களுக்கு மொட்டை அடித்துவிட வேண்டும். உங்கள் சம்மதம் எப்படி.

ரத்தினம் :-சாமி! இன்னியிலேயிருந்து நம்ப வெங்கடாசலபதிக்கும், பிரார்த்தனை மக்களுக்கும் நீங்க சொன்ன மாதிரியா வேலையைச் செய்து வர்ரேங்க சாமி நாங்க போக உத்திரவுவேண்டும்.

சேஞ -அப்பா! எல்லோரும் சௌக்கியமாகப் போய் சேருங்கள்.

நிர்மலா :-சித்தியம்மா! தெருத் திண்ணையில் அப்பாவைப் போல் குரலோசைக் கேட்கிறது, வாங் கம்மா போய் பார்க்கலாம்.

தேவி :-நிர்மலா, உங்கப்பாதான் வர்ருரு, பிராண பதி! மகாராஜா வீட்டின் வேலை எல்லாம் தீர்ந்தாய் விட்டதா சொல்லுங்கள்.

சேனு :-அம்மா நிர்மலா, நான் மகாராஜாவின் வீட்டில் வேலே செய்தது இவளுக்கு எப்படி தெரியும். ஏண்டி தேவி விட்டைத் தேடிவந்து உனக்கு யார் சொன்னது.

தேவி :-யார் வந்து சொல்லுவாங்க நீங்கதான் வந்து சொன்னீங்க. நான் பொய் சொன்னல் குழந்தையைக் கேட்டுப் பாருங்கள்.

சேனு :-தேவி! நான் உண்மையில் இங்கு வரவில்லே. ஏன் பொய்களேப் பேசுகிருய். அம்மா நிர்மலா! இன்னும் அவள் புத்தி அவளே விட்டுப் போகவில்லேயா? ஏன் என் மீதில் இப்படிச் சாதிக்கிருள்.

நிர்மலா :-அப்பா! சித்தியம்மா, சாதிக்கவில்லே. அன்றைக்கு ஒரு நாள் பணமுடிட்டையைக் கொண்டு வந்துக் கொடுத்துவிட்டு, மகாராஜா வீட்டுக்கு வேலேக்குப் போவதாகச் சொல்லிவிட்டுப் போனது உண்மைதான். இதுவெல்லாம் நிஜந்தானப்பா.

சேனு :-நிர்மலா! நீயும் இவளுடன் சேர்ந்து விட்டாயா என்ன. நீங்கள் சொல்வதெல்லாம் சுத்தப் பொய். நான் உண்மையாக வரவில்லே.

தேவி :-பிராணபதீ! ஏன் என்னே மனம் சோதிக்கிருய், நான் நிர்மலாவுக்கு விஷத்தைக் கொடுத்து கொன்றுவிட்டு உயிர் கடந்தவளே தடிக்கொண்டு அடிக்கும் சமயத்தில் என் இடது கையானது மேலுக்கு நின்றபோது, நீர் வரவில்லேயா? நான் தங்களிடம் குழந்தையைப் பாம்பு கடித்தது என்று சொல்லவில்லேயா? நீர் கடித்த பாம்பு போன வழியைக் கேழ்க்கவில்லேயா? நான் வழியைக் காண்பித்த போது பாம்பானது உண்மையாக வந்து என்னே துரத்தி அடிக்கவில்லேயா நான் பயப்பட்டபோது, அவர் காலில் விழுந்து சேவித்துக்கொள்ள நீர் சொல்லவில்லேயா; நான் காலில் விழுந்து சேவித்துக் கொண்டதும். என் நோய் தீர்ந்து நிர்மலாவின் உயிர் வந்து, உன்னேத் தாவிப் பிடிக்கவில்லேயா; எனக்கும்

குழந்தைக்கும் புத்திமதிகளைச் சொல்லி மகாராஜா விடம் வேலைக்கு நீர் போகவில்லையா பிராணபதி?

நிர்மலா :-அப்பா! சித்தியம்மா சொன்னதெல் லாம் உண்மைதானப்பா.

சேஞ :-நிர்மலா! நான் இன்றைக்கு மெய்மறந்து இருக்கின்றேன். என் புத்தி ஒருவிதமாக பாண்டு ரங்கன்பேரில் மாறி இருக்கிறது. நீங்கள் இருவர் களும் சென்று, இலையில் சாதம் போடுங்கள். நான் பூஜை அறைக்குச் சென்று, பாண்டுரங்கனை பூஜித்து வருகிறேனம்மா.

நிர்மலா :-"அப்பா! அப்படியே செய்யுங்கள். வாங்க சித்தியம்மா, அப்பாவுக்குச் சாப்பாடு தயா ரித்து வைக்கலாம்" என்று நிர்மலாவும், தேவியும் இலையில் சாதம் போடுகிறார்கள்.

36. கன்கமகாராஜன் சேஞநாவிதன் வரவில்லை என்று செல்வமகாராஜனையும், மந்திரியையும் நாட்டிற்குள் அனுப்பி, சேஞநாவிதனை அழைத்துவர உத்திரவு அளிக்கிறார்.

க. ராஜன் :-செல்வா! மவுந்துடன் திருப்பதிக்குப் போன சேஞநாவிதனை இன்றும் காணவில்லையே. இன்று சனிவாரம் எண்ணைத் தேய்க்கும் முறையை மறந்துவிட்டானு என்ன?

செல்வன் :-பிதா! சேஞ ஒருபோதும் மறக்க மாட்டான். ஏன் கவலைப்படுவது.

க. ராஜன் :-செல்வா! கவலை ஒன்றுமில்லை. இவ் விடம் தாமதிக்காமல் நாட்டிற்குள் சென்று, சேஞ நாவிதனைக் கண்டு, அவன் மனைவிடம் விஷயத்தைத் தெரிவித்து சேஞவை அழைத்துக்கொண்டு வாரும் செல்வா. சீக்கிரம் சென்று வா.

செல்வன் :-பிதா! அப்படியே செல்லுகிறேன். "மந்திரி, புறப்படும் போகலாம்" என்று செல்வன் சேஞ வீட்டிற்கு வருகிறார்.

37. சேனு பாண்டுரெங்கனை பூஜை செய்கிருன். அவன் பஞ்ச பூதங்களும், பண்டரிபுரம் போய் பாண்டுரெங்கனை தெரிசிக்க வருகிறது. தேவியும், நிர்மலாவும் சேனுவை வந்து பார்த்து இறந்துவிட்டார் என்று அழுகிருர்கள்.

சேனு :-ஓ பாண்டுரங்கா! பரமானந்தா! பக்த வத்ஸலா! இன்று உன் தரிசனத்தைக் கண்ணுற்றுப் பார்க்காமல் அன்னம் புசியேன், ஆகாரம் தொடேன். இதோ என் பஞ்ச பூதங்களும், உன் தரிசனம் காண பண்டரிபுரம் வருகிறது. காக்ஷியைக் கொடுப்பாய் பாண்டுரங்கா.

தேவி :-அடி அம்மா நிர்மலா! சாதம் இலையில் போட்டாய்விட்டது; பூஜை அறைக்குப் போய் உங்க அப்பாவை அழைத்துக்கொண்டு வாடி.

நிர்மலா :-சித்தியம்மா! இதோ அழைத்துக் கொண்டு வருகிறேனம்மா. அப்பா, இன்னும் பாண்டு ரங்கன் பூஜைத் தீரவில்லையா? எழுந்து வாங்கப்பா சாப்பிடலாம். இது என்ன சங்கடம் வாய்ப் பேச்சு இல்லாமல் மௌனமாக இருக்கிருறே. அம்மா! அம்மா!! இங்கே ஓடிவாருங்கள்.

தேவி :-நிர்மலா! என்னடியம்மா சங்கதி.

நிர்மலா :-ஒன்றுமில்லை அம்மா, அப்பாவை நீங்க தட்டி எழுப்புங்கள்.

தேவி :-பிராணபதி! பிராணபதி!! எழுந்திருங்கள். ஐய்யய்யோ! இது என்ன மோசம். நிர்மலா! உங்கப்பா என்பேரில் என்ன கஷ்டமோ தெரியவில்லையே. நீ தட்டி எழுப்பும் பார்க்கலாம்.

நிர்மலா :-அப்பா! எழுந்து சாப்பிட வாங்கப்பா. என்பேரிலும், சித்தியம்மா பேரிலும், உங்களுக்கு என்னப்பா மனக்கஷ்டம் எழுந்திருப்பா.

தேவி :-பிராணபதி! பிராணபதி!! நிர்மலா! உங்கப்பாவுக்கு மூச்சு வெளிவரவில்லையே. உங்கப்பா நம்மை மோசம் செய்துவிட்டாரம்மா. நாம் என்ன செய்வது கண்ணே.

நிர்மலா:-சித்தியம்மா, அப்படீன்னு அப்பா செத்துபோய்விட்டாரா சொல்லம்மா.

தேவி:-ஆமாண்டி, ஆமாம். அவர் இறந்துதான் போய்விட்டார், ஐயோ தெய்வமே. என் வாழ்வு இன்ருேடு தொலைந்துவிட்டதே. என்ன செய்யப்போகிறேன் பாண்டுரங்கா. பிராணபதி எங்களை இன்ருேடு மறந்துவிட்டீரா நாங்கள் எப்படி பூமியில் இருப்பது.

நிர்மலா:- அப்பா! என்னையும், சித்தியையும் மறந்துவிட்டீர்களா? உனக்கு எப்படி மனம் வந்து எமனிடம் உயிரைக்கொடுத்து உட்கார்ந்துவிட்டீர். இந்த தாயில்லாப் பெண்ணுக்கு உன்னைவிட யாரப்பா திக்கு இருக்காங்க. எனக்கு யாருமில்லையப்பா. என்னை உன்னைப்போல் யாரப்பா காப்பாற்றுவார்கள். அப்பாயாருமில்லையே அப்பா. திக்கில்லாப் பாவியாக நின்றுவிட்டேனே அப்பா. நாங்கள் எக்கதி அடைவது.

செல்லன்:-மந்திரி! சேனுநாவிதன் வீட்டிற்குள் ஒவென்று அழும் சப்தம் கேழ்க்கின்றதே என்ன காரணம்.

மந்திரி:-மகாராஜா! எனக்கு ஒன்றும் புலப்படவில்லை. வாருங்கள் வீட்டிற்குள் சென்று பார்க்கலாம்.

நிர்மலா:-பாண்டுரங்கா! பரமானந்தா! என் அப்பாவைக் கொன்றுவிட்டு, இங்கே உட்கார்ந்து வேடிக்கைப்பார்க்கின்ருயே பாமுங் தெய்வமே, உனக்குக் கண்ணில்லையா? என்னை ஏன் இப்படி பரதவிக்கும்படி பார்த்து இருக்கின்ருய்.

தேவி:-நிர்மலா! அழாதே அம்மா, நாம் என்ன அழுதாலும் உன் அப்பா வரப்போகிறதில்லை. அழாமல் சும்மா இரம்மா.

செல்வன்:-ஏ சேனுநாவிதன் மனைவி! ஏன் கோடு கோடென்று அழுவது

தேவி:-வள்ளலே! என் புருஷன் என்னையும், என் குழந்தையையும் விட்டுவிட்டு உயிர் கடந்துவிட்

டார் மகாராஜா! நான் இக்குழந்தையை வைத்துக் கொண்டு எப்படி ஜீவிக்கப்போகின்றேன்.

நிர்மலா :-அம்மா அழதேயுங்கம்மா. உன் உயிரும் போய்விட்டால் நான் என்ன கதி அடைவது. அழாதே அம்மா.

செல்வன் :-நிர்மலா! அழாதீர்கள். "அழுது அழுது புரண்டாலும் மாண்டார் வருவாரோ" இல்லை. பேசாமல் இருங்கள் மந்திரி சேனு நாவிதன் அவன் பெண்டு பிள்ளையையும் மறந்து உயிர் கடந்து விட்டான். எப்படி யோசனை.

மந்திரி :-மகாராஜா, எல்லோருக்கும் புத்திமதிகளைச் சொல்லி நீங்களே விசனப்பட்டு அழுவது பிரயோஜனமில்லை. சேனு நாவிதனை எடுத்துத் தகனம் செய்ய உத்திரவு அளிப்பீர் மகாராஜா.

செல்வன் :-மந்திரி அப்படியே. ஏ சேனுவின் மனைவி! இதோ பணப்பை. இதை வைத்துக்கொண்டு சேனுவை எடுத்துத் தகனம் செய்துகொள்.

தேவி :-மகாராஜா, என் புருஷனை எடுத்து தகனம் செய்ய என் ஜாதியார் ஒருவருமில்லையே. இந்தப் பிரேதம் எப்படிச் சுடலைக்குப் போகும்.

மந்திரி :-மகாராஜா! உண்மையே, ஜெயிலுக்குள் அடைத்து வைத்திருக்கும் நாவித மக்களை விடுதலைச் செய்தால் அவர்கள் வந்து இப்பிணத்தை எடுத்து தகனம் செய்வார்கள்.

செல்வன் :-"மந்திரி! நல்ல யோசனை, ஏ சேனுவின் மனைவி கவலைப்படாதே, ஒரு விநாடிக்குள் உன் இனத்தோர்கள் எல்லாரையும் விடுதலைச் செய்து அனுப்புகிறேன் கவலைப்படாமல் இரும். மந்திரி புறப்படும் போகலாம்" என்று செல்வமகாராஜன் தன் மாளிகைக்கு திரும்புகிருர்.

38. பண்டரிபுரத்தில் ருக்மணி தேவி சேனுநாவிதனின் பஞ்சபூதங்களைப் பார்த்து பாண்டுரெங்கனைக் கேட்டு ஆனந்தமடைகிருர்கள்.)

பாண்டுரங்கன் :-ருக்மணி! இந்த நந்தவனத்தின் பெருமையே பெருமை. இந்த நந்தவனத்தில் சற்று நேரம் சுகித்து விளையாடலாம்.

ருக்மணி :-நாதா! அதிருக்கட்டும். இதோ பாருங்கள், ஏதோ பஞ்சபூதங்கள் வந்து ரீங்கார சப்தத்துடன் நம்மை சுற்றி வருகிறதே. அது யாருடையது என்று சொல்லுங்கள் நாதா.

பாண்டுரங்கன் :-ருக்மனி! அதுதான் பக்த சேனுவின் பஞ்சபூதம் அறிந்தாயா?

ருக்மணி :-அறிந்தேன். அந்த பஞ்ச பூதங்களை பிடித்து ஒன்ருக சேர்த்து பக்த சேனுவின் உருவத்தைக் கொடுத்து, இங்குள்ள பக்தர்களின் ஆடல் பாடல்களை ஆடினுல், ஆனந்தமடைவேன் நாதா.

பாண்டுரங்கன் :-"ருக்மணீ! இதோ அப்பூதங்களைப் பிடித்து, பக்த சேனுவைப்போல் நிறுத்தி உயிர் கொடுத்தேன். சேனுவின் ஆனந்தக் கூத்தைப் பார்த்திருப்பாய் ருக்மணிதான் சேனுவுக்கு பதிலாக செல்வமகாராஜனிடம் சென்று இன்று சனிவாரம் அவ்வரசனுக்கு எண்ணெயைத் தேய்த்துவிட்டு ஒரு விநாடிக்குள் வருகிறேன்" என்று ருக்மணியிடம் தெரிவித்து பாண்டுரங்கன் செல்வரங்கபுரம் வருகிருர்.

39. செல்வமகாராஜனும் மந்திரியும் சேனு நாவிதன் உயிர்விட்டதைப்பற்றி கனகமகாராஜனிடம் வந்து தெரிவிக்கிருர். அதை அறிந்த அரசன் கீழே விழுந்து உயிர் கடந்து விடுகிருர்.

செல்வன் :-பிதா! நமஸ்கரிக்கின்றேன். சேனு நாவிதன் அன்பை இன்ருேடு மறந்துவிடும் பிதா.

க. ராஜன் :-செல்வா! சேனு உன்னை என்னச் செய்தான். ஏன் அவன் பேரில் உனக்கு அவ்வளவு மனக்கஷ்டம், உரைப்பாய்.

செல்வன் :-பிதா! இன்ருேடு சேனுநாவிதன் பக்ஷத்தை விட்டுத்தான் தீரவேண்டும்.

க. ராஜன் :-செல்வா: கொஞ்சம் பொறுமப்பா. சேனு நாவிதனுல் என் தீராப் பிணிகளெல்லாம்

தீர்ந்து சுகஜீவியாக இருக்கிறேன். அது உனக்கு தெரிந்த விஷயந்தான். அவனை எப்படி என் மனமாற மறக்க முடியும்.

செல்வன் :-பிதா அவ்விஷயத்தை பிறகு தெரிவிக்கின்றேன் இரும். மந்திரி ! துரிதமாக சிறைக்குள் சென்று அங்குள்ள நாவிதர்களை விடுதலைச் செய்து நடத்த வேண்டிய விஷயத்தைத் தெரிவித்து வாரும் மந்திரி.

மந்திரி :-மகாராஜா ! தங்கள் திட்டப்படிச் செய்து வருகிறேன்.

நாவிதர்கள் :-ஏண்டா காக்கா, இப்படி எத்தனை நாளைக்குத்தான் நம்ம மகாராஜா சிறையிலேப் போட்டு வைச்சிருப்பாரு சொல்லண்டா.

காக்கா:-அட பாவி மகனே அவரு இஷ்டத்திற்கு நாம்ப என்னத்தடா பண்றது.

மந்திரி :-அடே நாவிதர்களே ! உங்கள் உடன் பங்காளி சேனு என்பவன் உயிர் கடந்துவிட்டான். அவனை எடுத்து தகனம் செய்துவிட்டு, அவரவர்கள் இல்லத்திற்குப் போகும்படி மகாராஜா கட்டளை யிட்டார். எல்லோரும் சீக்கிரம் செல்லுங்கள்.

நாவிதர்கள் :- சாமி ! ராஜா சட்டப்படிக்கு செய்துவிடரேங்க. ஏண்டா பசங்களே நிக்கிறீங்க ? வாங்கடா சேனுவீட்டிற்குப் போகலாம்.

க. ராஜன் :-செல்வா ! சேனுவின்பேரில் உள்ள கோபமெல்லாம் தணிந்துவிட்டதாப்பா ? இன்னும் இருக்கிறதா.

செல்வன் :-பிதா ! சேனுவின்பேரில் எனக்கு என்ன கோபம் ஒன்றுமில்லை. கொஞ்சம் பொறுங்கள் தெரிவிக்கின்றேன்.

மந்திரி :-மகாராஜா ! சிறையில் உள்ள நாவிதர்கள் எல்லோரும் போய்விட்டார்கள்.

செல்வன் :-மந்திரி! சந்தோஷம். அப்படியானால் சேனுநாவிதன் விஷயத்தை என் பிதாவிடம் விபரமாகச் சொல்லும்.

மந்திரி :-மகாராஜா! அப்படியே. ஏ மகானு பாவா! சேனுநாவிதன் பக்ஷத்தை இன்ருேடு விடுங்கள். உயிர் கடந்துவிட்டான்.

க. ராஜன் :-ஹா! சேனு உயிர் கடந்துவிட்டானு. ஏ சேனு! என் உயிரும் உன்னை நாடிவருகிறது பார்த்துக்கொள்.

செல்வன் :-மந்திரி! என் பிதா, அவ்வாக்கியத்தைக் கேட்டவுடன் மூர்ச்சையாகிவிட்டார். ஆ! பாண்டுரங்கா, உன்னை ஆனந்தமாக பூஜித்துவரக் கூடிய என் பிதாவை இக்கொடுமைச் செய்ய எத்தனை நாள் கார்த்துக்கொண்டு இருந்தாய்? பாழுந் தெய்வமே, சண்டாள சதிக்கார தெய்வமே. இதோ உன்னைத் தூக்கி அடித்து உன் கை கால்களை வுடைத்து சின்னுபின்னமாகச் செய்து உயிர்வதைச் செய்யாவிட்டால் நான் ராஜபுத்திரனல்ல. நீ என்ன கதியாகிருய் பார்த்துக்கொள்.

மாயசேனு:-மகாராஜா! பாண்டுரங்கனைத் தூக்கி எரியாதீர்கள், வேண்டாம் வேண்டாம். இதோ சேனு நாவிதன் உயிர் மீண்டு வந்துவிட்டேன்.

செல்வன் :-என்ன ஆச்சரியம்! அப்பா சேனு! உயிர்போனவன் எப்படி உயிர் மீண்டு வந்தாய்.

சேனு :-மகாராஜா! ஸ்ரீ பாண்டுரங்கனைக் கீழே வையுங்கள். வந்த விதத்தைத் தெரிவிக்கிறேன்.

செல்வன் :-ஏ பாண்டுரங்கா! இந்த நாவிதன் வந்து உன்னை மீட்டுவிட்டான். இல்லாவிடில் உன் திரேகத்தை சின்னுபின்னமாக செய்து இருப்பேன். அதைமட்டும் உன் உள்ளத்தில் தெரிந்து உன் பீடத்தில் அமரும். சேனு! என் பிதா உயிர் கடந்திருப்பதைப் பார்க்கவில்லையா.

மாயசேனு:-மகாராஜா! எனக்கென்ன தெரியும்? நான் சேனுநாவிதன் உயிருடன் வந்துவிட்டதாகத் தெரிவித்து தங்கள் பிதாவைத் தட்டி எழுப்புங்கள் பார்க்கலாம்.

செல்வன் :-சேனு! உன் பெயரைச் சொன்னல் மட்டும் உயிர் மீண்டு வந்துவிடுவாரா. அப்படியே தட்டி எழுப்புகிறேன். பிதா! பிதா!! இதோ சேனு நாவிதன் உயிர் மீண்டு தங்களைத் தேடிவந்து இருக்கின்ருன் பிதா! எழுந்திருங்கள்.

க. ராஜன் :-எல்லாம் ஸ்ரீ பாண்டுரங்கன் அருள். அப்பா சேனு! என்னையும் என் குழந்தை செல்வனையும் பார்க்க எப்படி உயிர் மீண்டு வந்தாய். சொல்லும் சேனு.

மாய சேனு :-மகாராஜா! என் உயிரை எமன் கொண்டுபோகவில்லையே; நான் ஸ்ரீ பாண்டுரங்கனை பூஜை செய்யும்போது என் பஞ்சபூதங்களும், பாண்டு ரங்கனை தெரிசிக்க பண்டரிபுரம் போய்விட்டது. அதை அறியாமல் இந்த இளவரசர் என் மனைக்கேகி, என் ஊற்றை ஜடலத்தைப் பார்த்து, என் மனைவிடம் அதை எடுத்து தகனம் செய்யும்படி பணப்பையைக் கொடுத்து, இளவரசர் வந்ததாக என் மனைவி தேவி என்னிடம் தெரிவித்து, தங்களிடம் சொல்லும்படி அனுப்பினுள் மகாராஜா. இளவரசர் அறியாமல் செய்தது நீதியாகுமா மகாராஜா.

க. ராஜன் :-செல்வா! சேனு சொல்வதைக் கேட்டு ஏன் தலையைக் கீழே கவிழ்ந்துக்கொண்டாய். சேனுவின் பாபத்தைக் கொட்டிக்கொள்ளவா, எனக்குப் பிள்ளையாக ஜெனித்தாய், என் முகத்தைப் பார்.

செல்வன் :-பிதா! நான் அறியாமல் செய்தக் குற்றத்தை மன்னிக்கவேண்டும் பிதா.

சேனு :-மகாராஜா! இளவரசர் அறியாமல் செய்தக் குற்றத்தை மன்னித்து, நடக்கவேண்டிய வேலைகளைப் பாருங்கள் மகாராஜா.

க. ராஜன் :-சேனு! என்ன வேலை இருக்கிறது. செல்வனுக்கு இன்று சனிவாரம் எண்ணையைத் தேய்த்து நீட்டாட்டம் செய்கிற வேலைதான் இருக்

கிறது. அதைச் செய்துக்கொண்டிரும். நான் பாண்டு ரங்கனை பூஜித்துவருகின்றேன் சேனு.

சேனு :-மகானுபாவா! அடியேன் அப்படியேச் செய்கிறேன். பாண்டுரங்கனை ஆனந்தமாக பூஜை செய்துவாருங்கள். இளவரசே, தங்கள் மந்திரியிடம் தெரிவித்து, பாத்திரத்தில் எண்ணையைத் தருவியுங்கள்.

செல்வன் :-சேனு! அதிருக்கட்டும் பண்டரிபுரம் போன அதிசயங்களை கொஞ்சம் சொல்லுமே.

சேனு :-இளவரசே! நான் பண்டரிபுரம் போனேன். அங்குள்ள பாண்டுரங்கனையும், ருக்மணி தேவியையும் கண்டேன். 108 பாசுரங்களையும் படித்தேன். ஆனந்தக்கூத்தாடினேன். என் ஆடல்பாடல்களைக் கண்டு ஆனந்தமடைந்து இந்த தோல் அடப்பத்தை எனக்கு வெகுமதியாக கொடுத்தனுப்பினார்கள் மகாராஜா. இதுதான் பண்டரிபுரத்தின் பெருமை.

செல்வன் :-சேனு! பண்டரிபுரம் போய், பாண்டு ரங்கனையும் ருக்மணிதேவியையும் தெரிசித்தவரிடம், எண்ணையைத் தேய்த்துக்கொள்ளக் கூடாது, அது மகாதோஷம். அப்படி மீறி நடந்தால், என்னைப் பாண்டுரங்கன் தண்டிப்பார். வேண்டாம் சேனு.

சேனு :-மகாராஜா! கேவலம் நாவிதன் பாண்டு ரங்கனை தரிசித்தபோது இந்த செல்வரங்கபுரத்தை ஆளக்கூடிய இளவரசர், நீங்கள் தெரிசிக்கமுடியாதா மகாராஜா.

செல்வன் :-சேனு! என்னுல் எப்படி தெரிசிக்க முடியும் ஒருபோதும் முடியாது.

சேனு :-மகாாாஜா! ஏன் முடியாது? கட்டாயம் முடியும். பாண்டத்தில் எண்ணையைக்கொண்டு வரச் சொல்லுங்கள். அந்த பாண்டுரங்கனை உண்மைக்கு உத்தாரமாக நேரில் காண்பிக்கின்றேன் மகாராஜா.

மந்திரி :-மகாராஜா! சேனுவின் வார்த்தைப்படி நாம் நடக்கவேண்டும். அப்படி மறுத்தால் அந்த பாண்டுரங்கன் நம்மை தண்டிப்பார்.

செல்வன் :- மந்திரி! அப்படியானல் எண்ணெயைக் கொண்டுவாரும். சேனு! ஸ்ரீ பாண்டுரங்கன் தெரிசனத்தைக் காட்டுவது உண்மைதானு?

சேனு :-இளவரசே! உண்மைதான் கவலைப்பட வேண்டாம்.

மந்திரி :-அப்பா சேனு! இதோ எண்ணெயைப் பாத்திரத்தின் நிறையக் கொண்டுவந்து வைத்தேன், வேலை நடக்கட்டும்.

சேனு :-சந்தோஷம்! நீர் சென்று வெந்நீர்வைக்க உத்திரவளித்து வாருங்கள். நான் மகாராஜாவுக்கு வேலையைச் செய்கிறேன். மகாராஜா! இந்த பீடத்தின்மேல் அமருங்கள். ஆனந்தமாக எண்ணெயைத் தேய்த்து, பிறகு ஸ்ரீ பாண்டுரங்கன் தரிசனத்தைக் காண்பிக்கிறேன்.

செல்வன் :-சேனு! இதோ அமர்ந்துவிட்டேன். எண்ணெயைத் தேய்த்துவிடும் சேனு.

மாயசேனு :- மகாராஜா! அப்படியே. ஓ பாண்டுரங்கா! எனக்கும் உன் த்ரிசனத்தைக் கொடுத்ததுபோல், என் மகாராஜனுக்கும் உன் தரிசனம் கொடுக்கவேண்டும் சுவாமி. (என செல்வமகாராஜன் சிரசில் எண்ணெய் அறைப்பு தேய்ப்பது போல் தாளம்போட்டுக்கொண்டே) பாண்டுரங்கா! பரமானந்தா!!, பாண்டுரங்கா! பரமானந்தா!! பாண்டுரங்கா! பரமானந்தா!!.

செல்வன் :-சேனு! இதோ! பாண்டுரங்கன். ஏ பாண்டுரங்கா! உன் தரிசனத்தைக் கண்டேன். ஆனந்தங்கொண்டேன்.

மாயசேனு :-மகாராஜா! உண்மையில் பாண்டுரங்கனைப் பார்த்தீர்களா! காண்பியுங்கள் பார்க்கலாம்.

செல்வன் :-சேனு ஐயன் மாயமாக மறைந்துவிட்டார். பாண்டத்தில் பாண்டுரங்கனைக் காணவில்லையே சேனு. நான் என்செய்வேன்.

மாய சேனு :-மகாராஜா! உன் வார்த்தையை நான் நம்பிக்கைப்படவில்லை. எதோ மறுபடியும் எண்ணையை ஊற்றி தேய்த்துவிடுகிறேன். அந்த பாண்டுரங்கனைக் காண்பியுங்கள் பார்க்கலாம். பாண்டுரங்கா! பரமானந்தா!!, பாண்டுரங்கா! பரமானந்தா!!, பாண்டுரங்கா! பரமானந்தா!!, பாண்டுரங்கா! பரமானத்தா!!. (மறுபடியும் செல்வனுக்குத் தரிசனம் தருதல்)

செல்வன் :-ஆஹா சேனு! பாண்டுரங்கன், பச்சைநிற மேனியோடு பாண்டத்தில் இருக்கின்ருர் பார். ஏ! பாண்டுரங்கா, உன் தரிசனத்தைக் கண்டேன். ஆநந்தங் கொண்டேன். பாண்டுரங்கா.

மாய சேனு :-மகாராஜா! பாடுரங்கன் எங்கே இருக்கின்ருர்? பாண்டத்தினிடமாக காணவில்லையே மகாராஜா.

செல்வன் :-சேனு! நான் பொய்யனல்ல, உன் கிருபையால் அந்த பாண்டுரங்கனை இரண்டுமுறை தரிசனம் கண்டேன். எனக்கு போதுமானது சேனு. எண்ணெய் தேய்ப்பதை விட்டுவிடும்.

மாயசேனு :-மகாராஜா! இங்கே பாண்டுரங்கன் தரிசனத்தைக் காண நான் கொடுத்துவைக்காமல் போய்விட்டேன். தங்கள் மந்திரியை அழைத்து, வெந்நீர் தயார்படுத்தச் சொல்லுங்கள்.

செல்வன் :-சேனு! அதிருக்கட்டும். இதுமுதல் எனக்கு ஒருவேலையும் நீர் செய்யக்கூடாது. இந்த அரண்மனையில் உட்கார்ந்திருந்தால் போதும் சேனு. மந்திரி! இந்தச் சேனுவை அழைத்துச்சென்று பெட்டியில் இருக்கக்கூடிய திரவியத்தில் சேனுவுக்கு வேண்டியமட்டும், கொடுத்தனுப்பும் மந்திரி.

மந்திரி :-இளவரசே! அப்படியே. சேனு! வாரும், திரவிய அறைக்குச் செல்லலாம். சீக்கிரம் வாரும்.

க. ராஜன் :-செல்வா! சேனு நாவிதன் எண்ணே தேய்யக்கும் வேலையைச் சரிவரச் செய்தானு? ஏதேனும் குறைவுண்டா. சொல்லம்பா.

செல்வன் :-பிதா! சேனுவைப்பற்றிக் குறைவுச் சொல்ல நனல்ல. எண்ணெயைச் சுத்தமாகத் தேய்த்தான். நமது பாண்டுரங்கனின் திவ்வியமான தரிசனத்தை இரு தடவை காண்பித்தான். நமது மந்திரியுடன் சென்று திரவியங்களைப் பெற்றுக்கொண்டுப் போகும்படியாக உத்திரவு அளித்து அனுப்பி இருக்கின்றேன் பிதா சேனுவைப் பார்க்க வேண்டுமா?

க. ராஜன் :-செல்வா! வேண்டாம். சேனுவுக்கு என்ன சன்மானம் அளித்தாலும் தீராது. அவன் மகா உத்தமன். சற்று நேரம் அமர்ந்திருப்பாய். மந்திரி வந்ததும் ஸ்நானபானத்தை முடித்துக் கொள்வாய்.

மந்திரி :-இது என்ன ஆச்சரியம் சேனு! இந்த தோல் அடப்பத்தில் பெட்டியில் உள்ள திரவியத்தைக் கொட்டியும் நிறையவில்லையே என்ன காரணம்,

மாயசேனு :-ஒன்றுமில்லை இந்த அடப்பம், பாண்டுரங்கன் அளித்தது. அது என்ன கொட்டினுலும் நிறையாது. நான் என்னுடைய வீட்டிற்குப் போகிறேன் சுவாமி.

மந்திரி :-"சேனு உன் வீட்டிற்கு சுகமாக போய்ச் சேருங்கள் என்று சேனுவை அனுப்பிவிட்டு நடந்த விஷயத்தை மந்திரி மகாராஜனிடம் தெரிவிக்கிருர்.

40. சேனுவின் பங்காளிகள் சேனுவை தகனம் செய்ய வருகிறபோது, தேவியும், நிர்மலாவும் அழுகிருர்கள். அவர்களை தாஷித்து சேனுவைச் சுடலைக்கு கொண்டு போகிருர்கள்.

நிர்மலா :-சித்தியம்மா அழாதே! உன் முகமெல்லாம் வீக்கமாய்விட்டதே. நாம் என்ன அழு

தாலும் அப்பா உயிருடன் வரப்போகிருரா, இல்லையம்மா.

தேவி :-நிர்மலா ! நமக்கு ஒருவரும் திக்கில்லையே கண்ணே. நாம் திக்கில்லாப்பாவியாக நின்று விட்டோமே. அந்த பாண்டுரங்கனுக்கும் கண்ணில்லையே. நாம் என்ன செய்வது நிர்மலா.

கந்தன் :-ஏண்டி தேவி ! என்னடீ, ஊலையூக்கை சிந்திப்போட்டு தலைமாட்லே குந்திகிட்டு அழுதுகிட்டிருக்கிங்க. சங்கதியைச் சொல்லுங்கடி.

நிர்மலா :-தாத்தா! எங்கப்பா எங்களை எல்லாம் தனித்துவிட்டு மோசம் செய்துவிட்டார் தாத்தா. எங்கள் கதி எப்படித் தாத்தா.

கந்தன்:-ஏண்டி நிர்மலா, அந்த கம்மினுட்டி மகன் உங்களை மட்டுமா மோசத்தைச் செய்தான். எங்கள் 20 தலைக்கட்டு பங்காளிகளையும் மோசத்தைச் செய்துவிட்டு உயிரைவிட்டுச் செத்துக் கெடக்கிருன். அவன் கதையைச் சொல்ல வந்திட்டியே. பேசாமெ வாயை மூடிக்கிட்டு அந்த இடத்தைவீட்டு எழுந்துபோங்கடி.

நிர்மலா :-தாத்தா ! எங்களைப் பிடித்துத் தள்ளாதீர்கள் தாத்தா. உங்களை நாங்கள் என்ன செய்தோம் தாத்தா. கொஞ்சம் மன்னியுங்கள்.

கந்தன் :-ஏண்டி கம்மினுட்டிக்கு பிறந்த கசுமாலமே! இன்னுமா எதிர்த்துப் பேசறே. தூரமா போங்கடின்னு. ஏண்டா தாண்டவரா பாத்துகிட்டு நிக்கிறீங்க. இதோ ஏழு புள்ளு வைத்த ஏணிக் கொம்பு இருக்கிறது அதை எடுங்கடா. அதிலே தூக்கிவைச்சி எடுத்துக்கிட்டு சுடலைக்குப் போய் தொலையலாம்.

தா. ராயன் :-கந்தா ! ஏணியை எடுத்துகிட்டு வந்தூட்டேன், சனியம்புடிச்சவனே கால்கைகளை ஒடிச்சி பாடையிலே வையுங்கடா, எடுத்துகிட்டுப் போகலாம். ஏண்டா ! சீக்கிரம் ஆகட்டும்.

நிர்மலா :-தாத்தா! எங்கப்பாவை மெதுவாக எடுத்து வையுங்க தாத்தா.

கந்தன் :-ஏண்டி அறிவகெட்டவன் மகளே! தெரியும் அப்புறமா போடீ. தாண்டவராயா! கோவிந்தம்போட்டு தூக்குங்கடா போகலாம்.

தாண்டவராயன் :-கோவிந்தா! கோவிந்தா!! கோவிந்தா!!! கோவிந்தா.

தேவி :-சுவாமி, உன்னை எப்பொழுது பார்க்கப் போகின்றோம். எங்களைத் தனியே விட்டுப் போகின் றீர்களே. அந்த பாண்டுரங்கனுக்குக் கண்ணில்லையே சுவாமி. நாங்கள் திக்கற்றப் பாவியாக நின்று விட்டோமே சுவாமி. எங்களைவிட்டு சுடலைக்குப் போகிறாயே சுவாமி.

கிழவி :-ஏண்டி தேவி! போனவனை நினைச்சி, ஏண்டி இப்படி ஊருமெச்சிக்க அழுரே, தூரப் போடி சாணியைக் கரைச்சி தெளிச்சிக்கிட்டுப்போய் சட்டியை ஒடைச்சிவிட்டு வரணும்.

நிர்மலா :-பாட்டி சித்தியம்மாவைப் பார்த்துக் கங்க. எங்கள் அப்பாவை தகனம் செய்வதைப் பார்த்துவிட்டு வருகிறேன் பாட்டி.

கிழவி :-ஏண்டி! முண்டை எப்படியாவது தொலைஞ்சி போயண்டி. எனக்கு அருமையான பேத்தி உருக்கமாக சொல்ல வந்தீட்டே. நீயும் அப்படியேப் போய் சாவப்போடி.

கந்தன் :- கோவிந்தா! கோவிந்தா, கோவிந்தா, கோவிந்தா!!!!

த. ராயன் :-ஏண்டா கந்தா! கெட்ட எண்ணம் படைச்ச கம்மினாட்டிக்கு, ஏதுக்கடா கோவிந்தப் போட்ரது. எல்லாரும் தூக்கிட்டி ஓடியாங்கடா.

நிர்மலா :-தாத்தா! எங்கப்பாவை ஆடாமே எடுத்துக்கிட்டு போங்கள். உங்களுக்குப் புண்ணிய மாக போகட்டும் தாத்தா.

தா. ராயன் :-ஏண்டி சனியனே! உன்னை எவண்டி பிணத்தின்கூட வரச் சொன்னவன். அப்படியே தலைமேலே போட்டா சரி. அப்போதான் பேசாம வருவே.

நிர்மலா :-என்னை அடிக்காதிங்க தாத்தா. ஐயோ! அப்பா!! உன் திரேகமெல்லாம் ஆட்டம் கொடுத்து பாடையைவிட்டு கீழே விழுந்துவிடுவீர் போல் தெரிகிறதே அப்பா. பாழும் பாண்டுரங்கனுக்கும் கண்ணில்லையே அப்பா. தாத்தா! கொஞ்சம் மெதுவாகப் போங்கள் தாத்தா! எங்கப்பா கீழே விழுந்துவிடுவார் தாத்தா!

தா. ராயன் :-ஏண்டி சனியனே பேசாமெ வர்ரியா. என்னடி சொல்றே.

கந்தன் :-"ஏண்டா தாண்டவராயா! அந்தக் கழுதெகிட்ட என்னடாப் பேச்சு ஓடிவாங்கடா" என்று சேனுவைச் சுடலைக்குக் கொண்டுவருகிறார்கள்.

41. பண்டரிபுரத்தில், பாண்டுரங்கன் போய் ருக்மணியிடம் சேனுவின் திருவிளையாடலை சுவாமி விசாரிக்கிறார்.

சுவாமி :-ருக்மணி! சேனுவின் திருவிளையாடலைப் பார்க்கப் பார்க்க, ஆசை விடவில்லைப்போல் தெரிகிறதே ருக்மணி.

ருக்மணி :-அதற்கென்ன சந்தேகம். சேனுவின் திருவிளையாடலைப் பார்க்கப் பார்க்க, எனக்கு ஆனந்தமாகத்தான் இருக்கிறது. சற்று நேரம் நீங்களும் பாருங்கள் நாதா.

சுவாமி :-நல்ல வேலைதான். இதோ பூலோகத்தில் பாரும் ருக்மணி. பக்த சேனு உயிர்விட்டதாக அவன் சடலத்தைச் சுடலையில் கொண்டு தகனம் செய்யப்போகிறார்கள். அவன் பஞ்சபூதங்களையும், அவன் உடலுக்குள் அனுப்பிவிடலாம் ருக்மணி.

ருக்மணி :-நாதா! அப்படியானால் உடனே பஞ்ச பூதங்களையும் பக்தன் சரீரத்திற்கு அனுப்பிவிடும் நாதா, தாமதப்படுத்தாதீர்கள்.

சுவாமி :-ருக்மணி ! இதோ ஒரு விநாடிக்குள் அனுப்பிவிடுகிறேன். ஓ பஞ்சபூதமே! உன் நாற்ற சுரக்குடுக்கையில் போய் புகுந்துக்கொள். "ருக்மணி! சேனுவின் பஞ்சபூதங்களும் போய்விட்டது. வாரும் இந்த பூஞ்சோலையில் சற்று நேரம் விளையாடலாம்" என்று பாண்டுரங்கன் ருக்மணியை அழைத்துக் கொண்டு நந்தவனம் போகிறார்.

**42.** நாவிதர்கள் பாடையைத் தூக்கிக்கொண்டு ஓடுகிற போது, சேனுவின் பிரேதம் கீழே விழுந்துவிடுகிறது. நிர்மலா பார்த்து அழுகிறாள். நாவிதர்கள் அவளை அடித்து பிணத்தை தூங்கிச் சுடலைக்கு ஓடுகிறார்கள்.

கந்தன் :-தாண்டவராயா ! சனியன் பிடித்தவன், கீழே விழுந்துட்டாண்டா ; பாடையிலே தூக்கிவை யுங்கடா ஓட்டம் பிடிக்கலாம்.

நிர்மலா :- தாத்தா ! எங்கப்பாவை இப்படிச் செய்வது அழகல்லவே தாத்தா! எங்கப்பா முகமெல் லாம் அடிப்பட்டு உதிரம் வெளிவருகிறதே. எங் கப்பாவை மெதுவாக வைத்து எடுத்துக்கொண்டு போங்கள் தாத்தா! உங்கள் காலில் விழுந்து கும்பிடு கிறேன் தாத்தா.

தா. ராயன் :- ஏண்டி கம்மினாட்டி மகளே ! காலைப் பிடிச்சிக்கிட்டு அழுரே விட்ட ஒதையைப் பட்டுக் கீழே விழுந்து நீயும் சாகுடி. கந்தா ! விட்ட ஒதையைப் பட்டு கீழே விழுந்தூட்டாடா. வாங்கடா சுடலைக்கு போகலாம். பாக்காதீங்கடா, ஓடியாங்கடா.

நிர்மலா :-அப்பா ! என்னை அடித்துக் கீழேத் தள்ளிவிட்டு உன்னை எடுத்துக்கொண்டு ஓடிவிட்டார் களே அப்பா! என்னால் நடக்கமுடியவில்லையே அப்பா!

உன்னைக் கொண்டு என்னச் செய்வார்களோ அப்பா! என்னுல் நடக்கமுடியாமல் உட்கார்ந்துவிட்டேனப்பா ஏ பாண்டுரங்கா! எவ்விடம் ஒளிந்து இருக்கின்ருய்? கண்ணில்லாப் பாழும் கசட தெய்வமே, ஈவு இரக்க மில்லாத கல்நெஞ்சம் படைத்த காண்டா மிருகமே, நாயே பேயே, ஈனமான மில்லாமல் எங்கே ஒளிந்து இருக்கின்ருய்? சதிக்காரச் சண்டாளத் தெய்வமே, என் கண்ணுல் என் தகப்பனைச் செய்யும் கோரங்களைப் பார்த்துப் பூமியில் இருப்பதா. கோரத்தைப் பார்த்த என் நேத்திரம் இரண்டையும் இதோ இந்தக் கழிக் கோலினுல் குத்திச் சித்ரவதைச் செய்து கீழேத் தள்ளு கிறேன் பார்த்துக்கொள். பாழுந் தெய்வமே, எங்கே தெய்வம்! பாழுந் தெய்வம், சதிக்காரத் தெய்வம், சண்டாளத் தெய்வம், சத்ருதித் தெய்வம் எங்கே! எங்கே!! என்று நிர்மலா வழியில் பரதவிக்கிருள்.

43. நாவிதர்கள் சேனுவை சுடலையில் இறக்குகிறபோது, சேனுவிற்கு உயிர் வந்துவிடுகிறது. அதைக் கண்ட நாவிதர்கள் பயந்து வீட்டிற்கு ஓடிவந்து, தேவியிடம் சொல்லி வாசற்படியில் முறம், துடப்பம், கட்ட திட்டம் செய்துவிட்டு, அவரவர்கள் இருப்பிடம் ஓடி விடுகிருர்கள்.

கந்தன் :-தாண்டவராயா! சுடலைக்கிட்ட வந்துட் டோம், தோளாம்பட்டையெல்லாம் நோவுது, பாடை யோடே கீழே தொப்பென்று போடுங்கடா.

சேனு :-பாண்டுரங்கா! பரமானந்தா! பக்தவத் ஸலா! நீயே துணை.

கந்தன் :-தாண்டவராயா! செத்துப்போன நம்ப பங்காளி மகன் எழுந்து குந்திக்கிட்டு பாடையிலே கத்துருண்டா. பாடையைப் போட்டுட்டு ஓடிவந் திடுங்கடா வீட்டுக்குப் போகலாம்.

தா. ராயன் :-ஐயய்யோ! அம்மாடி! எல்லாரும் திரும்பி பாக்காமெ ஓடியாங்கடா.

சேனு :–ஏ பாண்டுரங்கா! இது என்ன விபரீதம். என் வீட்டிற்குள் உன்னை பூஜித்திருந்தவனை, சுடலைக்குக் கொண்டுவந்தது உன் சோதனைதானு? இது என்னக் கொள்ளை. என்னைக் கொண்டுவந்தப் பாடை இதுதானு. இதுவெல்லாம் என்னைத் தகனம்செய்ய விருட்டி விறகோ? ஒன்றும் புரியவில்லையே. இதெல்லாம் ஸ்ரீ பாண்டுரங்கன் மாய்கையாகத்தான் இருக்கவேண்டும். வீட்டிற்குப் போய், என்னருமைக் குழந்தை நிர்மலாவையும், என் மனைவியையும் பார்க்கலாம். பாண்டுரங்கா! பாண்டுரங்கா!!

நிர்மலா :–அப்பா எங்கே! சுடலை எங்கே! வீடு எங்கே! வாசல் எங்கே! தாய் எங்கே! என் தாத்தா எங்கே! என்னையும், என் அன்னையையும் இக்கோலம் செய்த பாண்டுரங்கன் எங்கே! எங்கே!!

சேனு :–ஆ பாண்டுரங்கா! என் குழந்தையை ரணக்கோலக் கோரத்தைச் செய்து, மறைந்து வேடிக்கைப் பார்ப்பது நீதியா? உனக்கு நீதியல்ல ஆஹா! என் குழந்தையின், இரண்டு நேத்திர விழிகளும் இதோ கீழே விழுந்துகிடக்கிறது. ஓ பாண்டுரங்கா! இதோ இந்த விழிகளைக் கொண்டு, இருக்கும் ஸ்தானத்தில் வைக்கின்றேன். இரண்டு நேத்திரங்களை நன்ருகச்செய்து குழந்தையை ரக்ஷிக்கவேண்டும் பாண்டுரங்கா! வருவாய்! வருவாய்!!

நிர்மலா :–அப்பா! உயிர் மீண்டு எப்படி என்னிடம் வந்தாயப்பா?

சேனு :–நிர்மலா! எல்லாம் அந்த பாண்டுரங்கன் அருளால் வந்துவிட்டேனம்மா குழந்தாய்! அதிருக்கட்டும், உன்னையும் என்னையும் இக்கதிக்குள்ளாக்கினவர்கள் யாரம்மா சொல்லும்.

நிர்மலா :–அப்பா! உன்னையும், என்னையும் இக்கோலத்தைச் செய்தவர் அந்த பாண்டுரங்கனும், என் பாட்டன்மார்களும் தான். வேறு யாருமில்லையப்பா.

சேனு :-ஓஹோ, அப்படியா சங்கதி; என் பங்காளிகள் வைத்திருக்கக்கூடிய பகைகளைத் தீர்த்துவிட்டார்களா? சந்தோஷம். இவ்விஷயம் பாண்டுரங்கனுக்குத் தெரியாதம்மா. வா! வீட்டிற்குப் போகலாம்.

நிர்மலா :-அப்பா! எங்க சித்தியம்மா உங்களையும், என்னையும் நினைத்து அழுதுகிட்டிருப்பாங்க, சிக்கிரம் நடந்துவாப்பா போகலாம்,

கந்தன் :-தாண்டவராயா! ராமசாமி! கோவிந்தா! எல்லாருமா கூடி தேவிக்கிட்ட சொல்லுங்கடா. எனக்கு பயமாய் இருக்குதுடா.

தேவி :-மாமா! பயப்படாம சங்கதியை சொல்லுங்கள் மாமா.

கந்தன் :-அடிப்பாவி முண்டே! சங்கதியை அப்புறமாக சொல்லித் தொலைக்கிறோம். வாசற்படியில் முறத்தையும், துடப்பத்தையும், முன்னேக் கட்டுப் போடி.

தா. ராயன் :-ஏண்டி தேவி! முறைச்சிக்கிட்டுப் பாக்கறே. உன் புருஷன் செத்துப்போனவன் பொழைச்சிக்கிட்டு வந்து நம்ப எல்லாரையும் கொல்ல வர்ரூண்டி. கந்தன் சொன்னமாதிரியா வாசற்படியிலே கட்டறவழியேப் பாரீ.

தேவி :-மாமா! அவர் உயிருடன் வந்தால் வறட்டும்; என்னைச் சாகடித்தாலும் அடிக்கட்டும்; லக்ஷிமி வரக்கூடிய வாசற்படியில் எதற்காக தரித்திரத்தைக் கொண்டு கட்டுவது சொல்லுங்க மாமா.

கந்தன் :-அடீ! உன் சாத்திரத்திலே மண்ணை வெட்டி போட, நீ எப்படின்னு தொலைஞ்சி போடீ. தாண்டவராயா! நம்ப எல்லாரும் வீட்டுக்கு ஓடி விடலாண்டா.

தா. ராயன் :-அட பாவி மகனே! இதோ பாருங் கடா! வீட்டிகிட்டே வந்துட்டான். சீக்கிரமா ஓட் டம் பிடிங்கடா.

சேனு :-அம்மா நிர்மலா! இதோ பாரம்மா, என் பங்காளியாகிய பகைவர்கள், நம்மைப் பார்த்து ஓடி விடுகிருர்கள். என்ன ஆச்சர்யம்.

நிர்மலா :-அப்பா! அப்பாவிகளை இன்றுமுதல் நம்முடைய வீட்டில் சேர்க்கவே கூடாதப்பா. அவர் கள் கொஞ்சமேனும் ஈவு இரக்கமில்லாச் சண்டாளர்க ளப்பா. அப்பா இதோ சித்தியம்மா நம்மைத் தேடி வருகிருர்கள் பாரப்பா.

தேவி :-பிராணபதி! கடந்த உயிரை எப்படி மீட்டுக்கொண்டு வந்துவிட்டீர்கள்? என்ன வீரம், என்ன சமர்த்து.

சேனு :-தேவி! நான் வீரத்திஞலும் வரவில்லை, சமர்த்திஞலேயும் வரவில்லை. நமது பாண்டுரங்கனின் அருளால் உயிர் மீண்டு வந்தேன். கவலையை விடும் தேவி.

தேவி :-பிராணபதி! சந்தோஷம் வாருங்கள் விட்டிற்குள் போகலாம்.

சேனு :-தேவி! நல்லக் காரியம் செய்தாய். நான் இன்று மகாராஜாவுக்கு எண்ணெய்த் தேய்க்கும் முறை; கட்டாயம் போய்த் தீரவேண்டும். நீயும், குழந்தையும் வீட்டிலிருங்கள். நான் உடனே வந்து விடுகிறேன் தேவி.

தேவி :-என்னத் தெரிவித்தீர்கள்? அவ் வார்த் தையை விடுங்கள் இன்றுமுதல் தங்களைத் தனித்து விட்டு இருக்கவே முடியாது. இது நிச்சயம்.

நிர்மலா :-அப்பா! சித்தியம்மா சொன்னமாதிரி யாக நான்கூட இருக்கமாட்டேன் அப்பா.

சேனு :-நிர்மலா ! அப்படியே இரண்டுபேரும் வாங்கம்மா. தேவி ! வீட்டைப் பூட்டிக்கொள், மகாராஜாவிடம் போகலாம்.

தேவி :-பிராணபதி ! கொஞ்சம் இருங்கள் பூட்டிக்கொண்டு வந்துவிடுகிறேன்.

44. கனகமகாராஜனும், செல்வமகாராஜனும், மந்திரியும் சேர்ந்து தலையை ஆற்றிக்கொண்டு சேனு நாவிதனை நினைத்துப் பேசி ஆச்சர்யப்படுகிறார்கள்.

செல்வன் :-பிதா ! சேனுநாவிதன் நாவித குலத்தில் பிறந்தாலும், ரொம்பவும் பக்தி உடையவன். ஞானத்திலும் மிகுந்தவன் நம்பேரில் அதிக பக்ஷமுடையவன் என்று என் மனம் ஆசைப்படுகிறது பிதா.

க. ராஜன் :-செல்வா ! என் மனமும் சேனுவின் பேரில் அப்படித்தான் ஆசைப்படுகிறது. எல்லாம் அந்த ஸ்ரீ பாண்டுரங்கனின் அருள்தான் செல்வா.

மந்திரி :-இளவரசே ! தங்கள் பிதா தெரிவிப்பது உண்மையான வாக்கியம்தான். நம்மிட மிருக்கும் பெட்டி திரவியத்தையும் அவன் வைத்திருக்கும் அடப்பத்தினிடமாக பெற்றுக்கொண்டு போனவன் பெரிய ஞானியாகத்தான் இருக்கவேண்டும்.

செல்வன் :-மந்திரி ! சேனு அதிக ஞானமுள்ளவன். சேனுவை குறைவுபடுத்தக்கூடியவர் இங்கு யார் இருக்கின்றார். ஒருவருமில்லை மந்திரி.

க. ராஜன் :-செல்வா ! நாம் சேனுநாவிதனை நினைத்தமாத்திரத்தில் இதோ மனைவி மகளுடன் வந்துவிட்டான் பாரும் செல்வா.

சேனு :-மகாராஜா ! நமஸ்கரிக்கின்றேன்; இந்த ஏழைச் சேனுநாவிதனை மன்னிக்கவேண்டும் மகாராஜா.

செல்வன் :-சேனு! நீ என்ன குற்றம் செய்தாயப்பா! ஏன் மன்னிப்புக் கேழ்ப்பது.

சேனு :-இன்று சனிவாரம் எண்ணெய்த் தேய்க்கும் முறை தவறிவிட்டபடியால் தங்களை மன்னிப்புக் கேட்டேன் மகாராஜா.

செல்வன் :-என்ன ஆச்சரியம் சற்று நேரத்திற்கு முன் எண்ணெயைத் தேய்த்துவிட்டுப் போனதை மறந்து மறுபடியும் நீ ஏன் வந்து மன்னிப்பு கேழ்க்கிருய் சேனு.

சேனு :-மகாராஜா! நான் இவ்விடம் வரவும் இல்லை. தங்களுக்கு நான் எண்ணெய்த் தேய்க்கவுமில்லையே மகாராஜா!

செல்வன் :-பிதா! இது என்ன ஆச்சரியம்! ஏ சேனு! எனக்கு எண்ணெயைத் தேய்த்தபோது, எண்ணெய் இருக்கக்கூடிய பாத்திரத்தில் ஸ்ரீ பாண்டுரங்கனை நிஜரூபமாகக் காண்பிக்கவில்லையா? அதை மறந்துவிட்டாயா சேனு?

சேனு :-மகாராஜா! எண்ணெய் பாத்திரத்தையும் பாக்கவில்லை, அந்த பாண்டுரங்கனையும் உனக்குக் காட்டவில்லையே நன்ருக யோசியுங்கள் மகாராஜா.

செல்வன் :-சேனு! இரண்டாவதாக என் தலையை நிமிர்த்தி எண்ணெயைத் தேய்க்கையில் அந்த பாண்டுரங்கனை பச்சைநிற மேனியாக நான் பார்த்து ஆனந்தம்கொண்டு உன்னிடம் சொல்லவில்லையா சேனு?

சேனு :-இளவரசே! ஏன் என்னை மனஞ் சோதிக்கின்ருய். உன் தலையைத் தொட்டு நிமிர்த்தவுமில்லை, பாண்டுரங்கனின் மேனியை நீர் பார்த்ததாக என்னிடம் சொல்லவுமில்லை: இதுகளெல்லாம் சுத்தப் பொய்.

செல்வன் :-பிதா! என்னைப் பொய்யனுக்கிய சேனு எதற்குத் துணிவான். அடே சேனு நான் வைத்திருந்த பெட்டி திரவியங்களையும், மந்திரியுடன் சென்று நீ வைத்திருக்கக்கூடிய தோல் அடப்பத்தில் கொட்டிக்கொண்டு போகவில்லையா?

சேனு :-மகாராஜா! உன் மந்திரியை யார் கண்டான். பெட்டித் திரவியத்தையும் யார் கண்டது நீங்கள் என்பேரில் வீண் புரளிச் செய்வது அந்த பாண்டுரங்கன் பொறுக்கமாட்டார். அதுமட்டும் விடுங்கள்.

க. ராஜன் :-செல்வா! சேனுவை ஏன் முறைத்துப் பார்க்கின்றாய். நீ என்னிடம் சொன்னதெல்லாம் பொய். உன் மந்திரி சேனுவிடம் திரவியத்தைக் கொட்டிக் கொடுத்தேன் என்று சொன்னதும் பொய். வாய் திறந்து பேசாமல் இரும் செல்வா.

செல்வன் :-பிதா வாயை மூடிக்கொண்டு அப்புறம் சென்றுவிடும். மந்திரி! சேனுவிடம் திரவியம் கொடுத்தது உண்மைதானு? இல்லையா? இதைச் சொல்லாவிடில் உன் சிரசை கண்டிப்பேன்.

மந்திரி :-மகாராஜா! அந்த பாண்டுரங்கன் சாக்ஷியாக திரவியத்தை இந்த சேனுவிடம் கொடுத்தது உண்மைதான்.

செல்வன் :-சேனு! ஏன் முழித்துப் பார்க்கின்ருய். இதற்கு பதில் சொல்லும்.

சேனு :-மகாராஜா! என் பெண்டு பிள்ளைகள் சாக்ஷியாக அந்த பாண்டுரங்கன் சாக்ஷியாகவும், உன் மந்திரியிடம் திரவியத்தை வாங்கவில்லை இது சத்தியம்.

செல்வன் :-சேனு! உன் சத்தியத்தை இப்பொழுதுப் பார்ப்பதே சரி. மந்திரி! இவனைக் கொண்டு போய் சிரசாக்கினைச் செய்து மற்ற காரியங்களைச் செய்ய வேண்டும். அழைத்துக்கொண்டு போ.

தேவி :-மகாராஜா! எங்கள் முகத்தை பார்த்து விடுங்கள் மகாராஜா. அவரை வீண் பழி சுமத்தி சிரசாக்கினைச் செய்வது ராஜக்குலத்திற்கு நீதியல்ல மகாராஜா.

நிர்மலா :-சுவாமி! எங்களப்பாவை விடுங்கள். ஐய்யய்யோ! அப்பா இந்தச் சண்டாள அரசனிடம் ஏன் வந்தீர். ஓ பாண்டுரங்கா! என் தகப்பனை வீண் பழிக்காளாக்கி சிரசைத் துண்டிக்கப் போகிறார்கள். நீயே துணை. ஏ மதிக்கெட்ட மந்திரி எங்கப்பாவை விட்டு அப்புறம் போய்விடும்.

சேனு:-சுவாமி! என்னை விடுங்கள் நானே வருகிறேன்.

மந்திரி :-நீ என்னுடன் மன்றாடினால் உன்னை விடுவேனென்று எண்ணவேண்டாம். சீக்கிரம் கொலை மேடைக்கு நடந்து போ.

சேனு :-சுவாமி! நீர் கொடுத்த திரவியம் பெட்டியில் இல்லாவிட்டால் என்னைக் கொலை செய்யுங்கள். பெட்டியிடம் வந்து பாருங்கள் சுவாமி.

க. ராஜன் :-ஏ மதிக்கெட்ட மந்திரி! மனமிரக்கமில்லா இளவரசே! திரவியப் பெட்டியைத் திறந்துக் காண்பித்துவிட்டு, சேனுவை கொலை மேடைக்கு அழைத்துச் செல்லுங்கள். அப்படித் திரவியம் பெட்டியில் இருந்துவிட்டால் உன்னையும். உன் மந்திரியையும் என்னிடமிருக்கு வாளாயுதத்தினால் சிரசைக் கண்டிக்காவிட்டால் நான் கனக மகாராஜனல்ல. சீக்கிரம் பெட்டியைத் திறவுங்கள்.

மந்திரி :-மகானுபாவா! இதோப் பெட்டியைத் திறந்தேன். என் பொய் மெய்களைப் பாருங்கள்.

க. ராஜன் :-ஏ செல்வா! உன் பெட்டி திரவியம் இப்பொழுது எப்படி வந்தது. வீணாகச் சேனுவின் உயிரைக் கண்டித்திருப்பீர்கள். இப்பொழுது உன்னையும் உன் மந்திரியையும் என்னச் செய்கிறேன்

பார்த்துக்கொள். கேவலம் மந்திரியின் வார்த்தை யெல்லாம் பொய். சேனுவின் பேரில் நீ சுமற்றின தெல்லாம் பொய். எனக்குப் புத்திரனுகப் பிறந்து தர்ம நீதி இல்லாமல் சாதித்து, சேனுவின் சிரசைக் கண்டிக்கச் சொன்ன, இதோ உன் சிரசை என் வலது கைவாளினுல் கண்டிக்கிறேன். பெட்டி யில் திரவியத்தை வைத்துக்கொண்டு வீண் பழி சுமற்றிய மந்திரியின் சிரசை என் இடது கை வாளினுல் கண்டிக்கிறேன். சிரசைக் குனிந்து காட்டுங்கள். ஏ பாண்டுரங்கா! இந்த சேனு நாவிதனை உயிரைச் சிதறப்படுத்தச் சொன்ன இந்த இளவரசனையும், நீதி முறை இல்லாமல் கொலை மேடைக்கு அழைத்துச் சென்ற மந்திரியையும் கண்டிக்கிறேன் பார்த்துக்கொள். சபாஷ்! சண்டா ளர்கள் ஒழிந்தார்கள்.

ஸ்ரீ பாண்டுரங்கன் :—“ ஏ கனகமகாராஜனே! செல்வமகாராஜன் பேரிலும், உன்றன் மந்திரியின் பேரிலும் குற்றம் ஒன்றுமில்லை. செய்த குற்றங்கள் எல்லாம் நானே. உங்கள் பக்தி நிலைமையை பரி சோதிக்க இதோ யிந்த பக்த சேனுவிடம் பிச்சைக் காரனுக வந்து, அன்னம் புசித்தவனும் யான். இதோ யிந்த தேவியிடம் அடிப்பட்டதும் யான். இதோ யிந்த நிர்மலாவின் சொற்படி சேவகநாக வந்ததும் யான். உனக்கு வியாதிகளை ஏற்படுத்தியதும் யான். சேனு வைச் சிறைக்குள் உயிர்வதைச் செய்தபோது, உயிர் கொடுத்து, அன்னம் இட்டதும், யான். உனக்கு ஏற்படுத்திய வியாதிகளை வைத்தியனுக வந்து தீர்த்ததும் யான். சேனுவைச் சிறையை விட்டு நீக்கி உங்களுக்கு அடிமைத் தொழில் செய்துவர வைத்ததும் யான். இந்த தேவியிடம் புருஷனுக பணம் மூட்டையை கொடுத்ததும் யான். பாம்பாக நின்று நிர்மலாவுக்கு உயிர் கொடுத்து தேவியைச் சீர்திருத்தியதும் யான். இந்த

யிளவரசன் என்னை பூஜித்த போது, உயிர் விடச் செய்து, உயிர் கொடுத்தும் யான். சிறைச்சாலையில், நாவிதர்களும், மந்திரியும் உங்களை தூஷித்தபோது அவர்ாளை வீர ஜாட்டியால் அடித்ததும் யான். திருப்பதியில் இந்த சேனுவிற்காக ஜனங்களுக்கு மொட்டையை அடித்ததும் யான். இந்த சேனுவை ஏரிக்குள் கைகால்களை கட்டிப்போட்டபோது, தெப் பக்கட்டையைப்போல் மிதக்கச் செய்ததும் யான். அங்குள்ள நாவிதர்களை கல்லாக நிற்கச் செய்ததும் யான். சேனுவின் பஞ்சபூதங்களையும் பண்டரிபுரம் அழைத்துச் சென்றதும் யான். உனக்கும் உயிர் கொடுக்கவும் இந்த இளவரசனுக்கும் எண்ணெய்த் தேய்ப்பதற்கும் சேனுவைப்போல் வந்ததும் யான். நிர்மலாவின் இரண்டு நேத்திரங்களையும் நன்ருகச் செய்ததும் யான். சேனுவின் பஞ்ச பூதங்களையும் விட்டு உயிர் கொடுத்ததும் யான். இந்த மந்திரியிடம் அடப்பத்தில் பெட்டி திரவியங்களையும் பெற்றுச் சென்றதும் யான். ஒரு விநாடிக்குள் பெற்ற திரவியத்தைப் பெட்டியில் வைத்தவனும் யான். இளவரசனையும் மந்திரியையும் சிரைசைக் கண்டிக்க உனக்குத் துணிவுகறத்தைக் கொடுத்தவனும் யான். உயிர் கடந்தவரை உயிர்கொடுத்து எழுப்பியதும் யான். உங்கள் எல்லோரையும் இன்றுமுதல் காக்கக்கூடியவனும் யான். ஏ பக்தர்களே! நீங்கள் எல்லோரும் இல்லர வாழ்க்கையிலிருந்து சஞ்சாரம் செய்துவந்தீராஞல் சிலகாலம் கழித்து வைகுண்ட ஏகாதசி விரத நாள் அன்று எனக்குப் பக்தராக ஏற்பட்டவரை வைகுண்ட பதவிக்கு ஆளாக்குவது நிச்சயம். நீங்கள் சுகஜீவியாக இருங்கள் பக்தர்களே! என்று சுவாமி மறைகிருர். அவரவர்கள் இல்லரம் சென்று சுகஜீவியாக வாழ்ந்து வருகிருர்கள்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

Jeevothayam Press, Triplicane Madras, printed for
Q. H. M. S. 549, 1,000 copies on 15-12-'47

## இன்னும்

## வெளிவரக்கூடிய கதைகள்.

1. பக்த சாந்தா - - - -
2. பக்த ராமலிங்கம் - - -
3. பதிவிரதா சபதம் - - -
4. வீண்பழி அல்லது நீலி - - -
5. ஏகமாலா அல்லது கிருஷ்ணன் பங்கம் -
6. மாயாம்பிகா - - - -
7. கருணசேகரன் அல்லது பத்மாவதி கொலை